ஆகஸ்ட் 1967 (ஸ்ராவண் 1889)
August 1967 (Sravana 1889)

*By kind permission of*

*The Authors and University of Chicago Press, Chicago, U.S.A.*

விலை : ரூ. மூன்று
PRICE : Rs. 3-00

THE EDICTS OF ASOKA

*by*

N. A. NICKAM & RICHARD MCKEON

*(Tamil)*

PUBLISHED BY THE SECRETARY, NATIONAL BOOK TRUST, INDIA, NEW DELHI-13
AND PRINTED AT THE JANATHA PRINTING & PUBLISHING CO., (P) LTD., MADRAS

# முன்னுரை

முன்னூராண்டுகட்கு முன்னர் ப்ரான்ஸிஸ் பேகன் கூறியது போல் அறிவே சக்தியாகும். விஞ்ஞானம் ஓங்க ஓங்க ஊடாடல் என்பது சக்தி அறிவு இரண்டிற்குமே உதவும் ஒரு கருவியாகி விட்டது. தற்காலத்தில் பல முரண்பாடுகளைக் காண்கின்றோம். இவை யெல்லாம், ஒருபுறம் விஞ்ஞானத்திலும் தொழிலியலிலும் கிடைத்திருக்கும் ஊடாடற் சாதனங்களின் வளர்ச்சி, ஒருபுறம் அரசியல் உறவிற்கும் பொருளாதாரப் பண்ட மாற்றுக்கும் பண்பாட்டுக் கொடுக்கல் வாங்கலுக்கும் விதிக்கப் பெற்ற தடைகள், இவ்விரண்டினுக்கு முள்ள முரண்பாட்டுக்குள் அடங்கும். ஆராய்ச்சி என்ற தன்மையில் விஞ்ஞானத்திற்கும், அரசியல் உறவு சமூக உறவு என்ற தன்மையில் குடியாட்சிக்கும், ஊடாடல் இன்றியமையாதது. ஒருபுறம் விஞ்ஞான முன்னேற்றமானது மக்களின் பல பிரச்சினைகளைத் தீர்க்க உதவும் பொருள்களையும் வழிகளையும் தந்துள்ளது; ஒருபுறம் அதுவே ஸர்வநாசத்திற்காகிய கருவிகளை ஆக்க உதவியிருப்பதுடன், விஷயங்களை ஆய்ந்து ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்வதில், தடைபோடுவோரின் ஆட்சி முறையின் வேறுபாட்டை அனுசரித்துப் பல்வேறு தடைகளுக்கு உள்ளாகியிருக்கின்றது. ஒருபுறம் குடியாட்சியின் வளர்ச்சியானது, தம்மைத்தாமே ஆண்டு கொள்வதற்கும், தனிமனிதனின் சுதந்திரத்தையும் பொதுமக்களது உரிமைகளையும் நலனையும் பேணுவதற்கும், ஆகிய வழிகளை மக்கள் கண்டு கொண்டு விட்டனர் என்ற நம்பிக்கை நியாயமே என்று காட்டி விட்டது; ஒருபுறம் வெவ்வேறு அரசியற் சூழ்நிலைகளிலும் வெவ்வேறு சமுதாயச் சூழ்நிலைகளிலும் வெவ்வேறு விதமாக

உபயோகிக்கப் பெற்றும் மாற்றப் பெற்றும் வருகின்ற மக்களது பரஸ்பர ஊடாடற் கருவிகளின் சக்தியே, தடையிலா ஊடாடலுக்கு இன்றியமையாத வேற்றுமையும் சகிப்புத்தன்மையும் குறைந்து போகக்காரணமாகி விட்டது.

நாகரிகத்தின் பிரச்சினைகளும், சமூகத்தின் பிரச்சினைகளும் பெரும்பாலும் அதிகாரம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளே, அதிலும் சிறப்பாக அரசியல் அதிகாரம், பொருளாதார அதிகாரம், இவை சம்பந்தபட்டவையே. ஆயினும், சமாதானமும் பொது நலனும், அரசியல் பேச்சுவார்த்தை மூலமாகவோ பொருளாதார ஏற்பாடுகள் மூலமாகவோ மட்டில் நிலை பெறக்கூடியவை அன்று. சத்தியம், ஆத்மீகக் குறிக்கோள்கள் இவைகளே அதிகாரத்தின் கருவிகளாகப் பயன் படுத்தப்பெறும் போது, இவை அதிகாரத்தில் ஒன்றை ஒன்று எதிர்த்து நிற்கும் கட்சிகளால் சத்தியத்தைப் பற்றிய தங்கள் தங்கள் அபிப்பிராயத்தை எதேச்சாதிகாரம் கொண்டு திணிக்க உத்தேசிக்கும் வெறியாக மாற்றப் பெறுகின்றன. தற்காலத்தில் நிலவும் இத்தகைய வெறிகளுக்குப் பல காரணங்கள் உண்டு. ஒரு காரணம் எதிராளியிடம் உண்மையாகவே இருப்பதோ, அல்லது இருப்பது போல் கட்டி விடப்பட்டதோ, ஆகிய காரணமற்ற வெறியினின்றும் ஏற்பட்ட பயமாகும். வெறியை எதிர்ப்பதானது எதிர்ப்பவரிடமே பல வெறிகளைப் பிறப்பிக்கக்கூடியது. ஆனால் இவ்வெறிக்கு ஆளானோர் தவறான எண்ணங்களை நாசம் செய்வதற்கென்று பிறந்த எங்கள் வெறியில் தோஷமில்லை என்று கூறி ஏமாறுவர். அதிகாரப்போராட்டத்தில் சகிப்பு என்பது ஒரு பலக் குறைவு என்று பலருக்குத் தோன்றலாம். ஆயினும், திட்டமிட்டு நடக்கும் காரணமற்ற மோதல்களுக்குப் பரிகாரம் சகிப்பு ஒன்றே. பரஸ்பர பயங்களுக்கும் விரோத மனப்பான்மைக்கும் பிறப்பிடமான வெறியின் முதற்

காரணம் அவரவரது சரித்திர வழி வந்த அபிப்பிராயங் களையும் பண்பாடுகளையும் மட்டில் அறிந்துகொண்டு, பிறர் சரித்திர வழி வந்தவற்றை அறியாதிருத்தலேயாகும். முதல் உலக மகாயுத்தம் முடிந்த காலத்திலிருந்தே சிலர் குறைவாகவும் சிலர் அதிகமாகவும் மக்கள் தங்கள் தங்கள் தேசத்தின் கலாச்சார சம்பிரதாயங்களுள் பலப்பல அளவில் சிறைப்பட்டிருக்கின்றனர். சிறப்பாக இக்காலத்தில் அரசியல் கருத்துக்கள், கருத்து வேறு பாட்டுக்கு இடமளிக்காதவையும், அதன் காரணமாகப் பிறர் கருத்துக்கு மதிப்புக் கொடாதவையுமான, தத்து வங்களை அடிப்படையாகக் கொண்டிருந்தன. இத்தத்து வங்கள் அதிகாரத்தையும் மிருக பலத்தையும் பெருமைப் படுத்தி, பொருளாதாரத் தேவை ஒன்றே மனிதனை ஆட்டுவிக்கின்றது என்ற கருத்தை வளர்த்து, மற்ற உயரிய நோக்கங்களை யெல்லாம் மனிதனை ஆட்கொண்டு ஏமாற்றும் கற்பனைகள் இவை என்று சொல்லும் அளவிற் குத் தாழ்த்தி விட்டன.

அரசியல் அதிகார வேட்டையும், பொருளாதாரப் பண்டக்குவிப்பும், கலாச்சாரத்தின் போக்கை மாற்றவல் லவை ஆயினும், இவை மட்டில் கலாச்சாரத்தின் சரித் திரத்தில் கூறப்பெறும் விஷயமல்ல. அதிற் கூறப்பெறும் பொருள்களில் இவை மிக முக்கியம் என்று கூடச் சொல்ல முடியாது. பல சாம்ராச்சியங்கள் ஜெயித்துச் சிதைவுற்றுப் போயிருக்கின்றன. மக்களுள் ஒரு பகுதியினர் மற்றவர் களையோ, ஒரு தேச மக்கள் பிறதேச மக்களையோ அடிமைப் படுத்தி அதிகாரம் செலுத்திப் பின்னர் அவ்வதி காரத்திலிருந்தும் வீழ்த்தப் பெற்றிருக்கின்றனர். ஆயி னும் இத்தகைய சரித்திரப் போக்குகளும் கூட வெறும் அதிகார மோதல்கள் அல்ல. அவ்வக்காலத்தில் உள்ள ஆக்க சக்திகளுக்கும் அழிவுச்சக்திகளுக்கும் உள்ளாகியே இவையும் இயங்கின. அச்சக்திகளும் இவற்றால் பாதிக்

கப் பெற்றன—மதங்கள் பரவின, சுருங்கின. கலாசாரங்கள் முதலில் விரிவான பொது நல உத்தேசமும் ஆத்மீகத் தன்மையும் நிறைந்தவையாகத் தொடங்கிப் பின்னர் தன்னலத்தையும் லோகாயதத்தையும் நோக்கங்களாகக் கொண்டவையாக மாறின. உண்மைகளைக் கண்டு, அவ்வுண்மைகளை வேலைக்குப் பயன் படச் செய்வதில் உள்ள திறனுக்காகவே பகுத்தறிவுக்கு மதிப்பு ஏற்பட்டிருக்கின்றது. அதே பகுத்தறிவானது வெறும் மதிநுட்பத்தின் மூலம் தம்மையே தாம் ஏமாற்றிக் கொள்ளவும், தம் மனப்போக்குக் கேற்றவாறு பொருள் கூறவும் உதவும் ஒரு கருவியாக இருக்குமோ என்று அஞ்சப்படுகிறது. பெருங்காப்பியங்களையும் துக்காவஸானங்களையும் ஆக்கிய கவிகள், அதிகாரமும் நிலையும் வேறு உயரிய நோக்கங்களுடன் மோதி, வெகுவாக அவற்றுக்குத் தணிந்து போவதைச் சித்தரிக்கின்றனர். தீர்க்கதரிசிகளும் மத இயல் வல்லுனரும் இவ்வுலகத்திய குறிக்கோள்களைப் புறக்கணித்துச் சாசுவதமான குறிக்கோள்களைப் பற்ற வேண்டி தானத்திலும் பரிசுத்தத்திலும் தூண்டுதலைக் காண்கின்றனர். செல்வம், புகழ், சுகம், இவற்றுக்கு அப்பாற்பட்ட சட்டங்களைத் தங்களுக்கு அத்தாட்சியாக நியாய அநியாயங்களை உணர்த்தும் பெரியோர் கையாளுகின்றனர். அரசியல் வல்லுனர் ஸ்தாபனங்களுக்கும் உத்தேசங்களுக்கும் பகுத்தறிவிலும் ஒழுங்கிலும் ஆதாரத்தைத் தேடுகின்றனர். அதிகாரத்தைக் கைப்பற்றும் நோக்குடன் ஏற்பட்ட புரட்சிகள் ஒருபுறமிருக்கட்டும். சிலர் இன்னும் தீவிரமான புரட்சிக்கு அறிகுறியாக உலகப் போக்கிலிருந்தே விலகி, அதிகாரத்தையும் வெறும் பொருள்களாகிய லாபங்களையும் அடைய வற்புறுத்தும் தூண்டுதல்களையெல்லாம் ஒதுக்கி, வேறு உயரிய நோக்கங்களைக் கொண்ட சமயங்களை அடிப்படையாகக் கொண்டவையும் சமுதாய வாழ்வை அடிப்படையாகக் கொண்டவையுமான வகுப்

புக்களை ஏற்படுத்தியிருப்பது எல்லாக் கலாசாரச் சரித்திரங்களிலும் காணக்கிடக்கின்றது. சிலர் அதிகாரத்தில் முதலில் ஊன்றிக் கொண்டு, பின்னர் மக்கள் நலனை ஓம்புவதற்காக அவ்வதிகாரத்தை எவ்வாறு பயன் படுத்தக் கூடும் என்பதில் மனத்தைச் செலுத்தியதையும் காண்கிறோம்.

இன்னூலில் இப்போது புதிதாகப் பதிப்பிக்கப்பெற்றிருக்கும் அசோகரது சாசனங்கள் மேற் கூறியவாறு அதிகாரமானது மற்ற உயரிய நோக்கங்களோடு இணைவதின் மூலம் கிரியாம்சத்தில் உதவுவதற்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். ஏராளமான அதிகாரத்தைச் சம்பாதித்துப் பிறகு மனமாற்றத்தை அடைந்த ஒருவரது விளம்பரங்கள் இவை. நற்பண்புகளுக்காவும், சமூக நலத்திற்காகவும், நல்லொழுக்கத்திற்காகவும், அதிகாரத்தை உபயோகிப்பதானது எவ்வாறு அவ்வதிகாரத்திற்கே ஒரு பரந்த தன்மையை ஊட்ட வல்லது என்பதற்கு இவை திருட்டாந்தங்களாக அமையும். குறிப்பிட்ட தேசம், குறிப்பிட்ட கலாசாரம், இவற்றின் எல்லையைக் கடந்து நிற்கும் ஒரு பரந்த தன்மை இவற்றில் இருக்கின்றது.ஒருவரைஒருவர் புரிந்து கொள்வதின் வாயிலாக மக்களுள் பரஸ்பர நம்பிக்கை ஏற்பட வேண்டு மென்பது இவற்றின் நோக்கம். அதிகாரப்பிரயோகம் விளைவிக்கும் கொடுமையால் மனம் நொந்து சிந்தனைகளுக்குள்ளாகிய மார்க்கஸ் ஔரெலியஸ் போன்ற மற்ற அரசர்களின் சிந்தனைகளை இவை நினைவூட்டுகின்றன. வகுப்பு எல்லைகளைக் கடந்த பரந்த தன்மை இவற்றில் காண்கின்றது. இவை மானிட வர்க்கத்தையே ஒரு குடும்பமாகவும், அதில் பணம் படைத்தோருக்கும் ஏழைகளுக்கும், அதிகாரம் படைத்தோருக்கும் தாழ்ந்தோருக்கும் ஏற்பட்ட கடமைகளும் உரிமைகளும் ஒன்றே என்றும், பாவிக்கின்றன. சட்டத்திற்கும் ஒழுக்கமுறைகளுக்கும் அப்பாற்பட்ட ஒருபரந்த தன்மை

இவற்றில் காணக்கிடக்கின்றது. இவை அதிகாரத்தின் செயல் திறனைக் கல்வியின் திறனோடும் சிந்தனையின் திறனோடும் இணைத்து, சட்டத்தையே அன்பாலும், நியாய உணர்ச்சியாலும், சகிப்புத்தன்மையாலும் பண் படுத்துகின்றன.

அசோகர் ஒரு சக்கரவர்த்தி. ஜயசீலன். கலிங்கக் குறும் போருக்குப்பின் அவருக்குப் பச்சாத்தாபம் மிகுந்தது. இப்பச்சாத்தாபத்தின் விளைவுகளான அவரது முடிவுகள் அவர் ஒரு தத்துவஞானி என்பதை வெளிப்படுத்தின. தம் நாட்டின் எல்லைகளில் பாறைச்சாசனங்களைப் பொறித்து, தம் குறிக்கோள்களையும் உத்தேசங்களையும் அண்டை நாட்டு மக்களுக்கும் எல்லைப்புறப் பிரஜைகளுக்கும் அவர் தெரியப்படுத்தினார். நாட்டின் உட்புறமுள்ள முக்கியமான விடங்களில் தூண்சாசனங்களை நிறுவித்தம் தார்மீக சமுதாயநலக் குறிக்கோள்களை வெளிப்படுத்தினார். குகைச்சாசனங்களில் மத வழிபாட்டுக்கான இடங்களைச்சமர்ப்பணம் செய்தார். இவ்வாறு சாசனங்கள் வாயிலாகவும் சட்டங்கள் வாயிலாகவும் தம் சிந்தனைகளை வெளிப்படுத்தித் தாம் ஒரு அரசியல் ஞானி என்பதை நிரூபித்துக் கொண்டார். ஆயுதத்தால் பெறும் ஜயத்திற்குப்பதிலாக தரும நியாயத்தையும், சீலத்தையும் அடிப்படையாகக் கொண்ட தரும ஜயத்தைக் கைக்கொண்டு தாம் ஒரு சீலஞானி என்பதை நிரூபித்துக் கொண்டார். அவர் வெளி அனுஷ்டானங்களை விட்டு உட்சிந்தனைகளிலும், அழியக் கூடிய உடைமைகளை விட்டுச் சாசுவதமான உண்மைகளிலும் ஈடுபட்ட ஒரு மதநாயகரும் ஆவர். ஆனால் இவை எல்லா வற்றுக்கும் மேல், அவர் ஒருபெரும் போதகர் ஆவர்; சிறப்பாக மற்றவர் கருத்தைப் புரிந்து கொள்வதன் மூலம் சகிப்புத் தன்மையைப் போதிப்பவர் ஆவர்.

அசோகர் தம் போதனைகளைத் தருமம் என்ற ஒரு சொல்

வில் அடக்கிவிட்டார். தருமத்தின் இலக்கணத்தைக் கூறி அதை யாவரும் அறியுமாறு செய்து பரப்புவதுதான் தமது வேலை என்பது அவரது எண்ணம், என்று அவரது சாசனங்களிலிருந்து தெளிவாகத் தெரிகின்றது. பல பொருள் பட்ட அச்சொல்லுக்கு அவர் கொடுத்த பொருள் அவரது போதனையின் பலத்தையும் அவருக்கே சிறப்பான தன்மையையும் கோடிட்டுக் காட்டுகின்றது. தருமம் என்பதற்கு சமயம் பரிசுத்தம் இவற்றின் உட்கருத்துக் களும் போதனைகளும் பொருளாகும். அதற்கே ஒழுக்கம் சீலம், இவற்றின் தத்துவங்களும் உபதேசங்களும் பொருள் என்றும் கொள்ளப்பெறும். அசோகரது போதனை களுக்குப் பொருள் கொள்வதில் பின்னர் எற்பட்ட வித்தி யாசங்களைக் கவனித்தால், சமயம், சீலம் இவற்றின் ஆதாரப் பிரச்சினைகள் தெளிவாக விளங்கும். அசோகர் தருமம் என்று கொண்டது சிறிது பௌத்தக் கலப்புடன் ஹிந்து தருமமேயாகும், என்பர் சிலர். சிலர் பிராமண ருடைய கொள்கைகளுக்கு எதிர் வெட்டாக, பௌத்த தருமமே பிரதானமாக அவர் கொண்ட தருமம் என்பர். சிலரோ சமய எல்லைகளைக் கடந்த ஒழுக்க நெறியின் விரி வான தன்மையே தருமம் என்றும், ஆகையால் தருமத் திற்கு மதப்பற்றின் நெறிகள் என்றோ ஒழுக்க நெறிகள் என்றோ இருவிதமான மொழி பெயர்ப்பும் தவறான பொருளைத் தரத்தக்கது என்றும், கூறுவர். இத்தகைரே சாசனங்களில் உட்கருத்துக்களுக்கு முரணானது எனலாம். சீரிய வாழ்கையில் பல துறைகள் ஒன்றோடொன்று பின் னிக்கிடப்பதை மிகத்தெளிவாக மனத்திற் கொண்டே அசோகர் தம் சாசனங்களை விடுத்தார். அத்தகைய வாழ்க்கையானது வாழ்கையில் ஒரு மனிதனது நிலையை அனுசரித்து அவனது கடமைகளை எடுத்துக் காட்டு கின்றது. இப்பிரபஞ்சத்தில் அடிப்படையான ஒரு ஒழுங்கு இருப்பதையும், அதில் ஒரு உண்மை ரூக்ஷுமம

மாகக் காணப்படுவதையும் அது காட்டுகின்றது. குடும்பங்களாகவும், வகுப்புக்களாகவும், சமயங்களாகவும் ஜனப்பகுதிகளாகவும் கூடிவாழும் மக்களை ஒன்று சேர்க்கும் பிணைப்பாக அது விளங்குகின்றது; வெவ்வேறு கலாசாரங்களிலும் மதங்களிலும் வெவ்வேறு விதமாகக் கூறப்பட்டிருப்பதும், ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு சமாதானமாக வாழ்வதற்கு ஆதாரமாக உதவுவதும் ஆன அடிப்படைத்தத்துவம் அது; அது செயலுக்கும், ஆத்தும ஞானத்திற்கும், ஆனந்தத்திற்கும் வழிகாட்டி; அது செயலினுல் சாதிக்கப் பெறுவது, உபதேசத்தால் விருத்தியாவது, மேலுத்தரவுகளால் இரட்சிக்கப் பெறுவது, இப்படி ஆக்கம் அடைந்து அரசியல் நோக்கங்களுக்கும், கல்விக்கும், நீதிக்கும், ஆதாரமாக அமைவது; அது தன்னுராய்ச்சியாலும் சிந்தனையாலும் மனமாற்றத்தாலும் காணப்பெறுவது; அதற்கு முரணுன யாவற்றையும் ஒதுக்கித் தள்ள வேண்டுமாறு அமைவது.

ஹிந்துக்களின் கொள்கைப்படி தருமம் என்பது ஒவ்வொரு மனிதனின் வருணத்திற்கும் ஆசிரமத்திற்கும் ஒத்தவாறு அவனது வாழ்க்கை முறையை வகுப்பது. அதனுல் அவன் தனக்கும் தன்னைச் சேர்ந்தோருக்கும் தன் சமுதாயத்திற்கும் மதத்திற்கும் ஆற்றவேண்டிய கடமைகள் யாவும் தீர்மானிக்கப்பெறும். ஒவ்வொரு வருணத்திற்கும் தனித்தனி தருமம் உண்டு. ஆனுல் அத்தருமமே தேவர்க்கும் அப்பாற்பட்டு நின்று அவர்களால் இரட்சிக்கப்பெற்று வரும் ருதம் அல்லது சத்தியம் எனப்பட்ட நியதியும் உண்மையும் ஆகும். பௌத்தர்களோ, சார்பற்ற உண்மை, யாவற்றையும் கடந்த ஸத்தை, என்று தெய்வ இயலிலும் தத்துவ இயலிலும் தருமத்திற்குக் கூறப்பெற்ற பொருள்களை ஒதுக்கி, இயற்கையின் நியதிகளிலும் மக்கள் உறவுகளிலும் இயங்கும் அதன் பொருளை முக்கியமாகக் கொள்வர். தருமம் அரசர்க்கெல்லாம் அரசன்,

ஒரு பொருள் அல்லது மனிதனுடை தன்மைகளிலும் ஆதாரத்திலும், காரணத்திலும் அது வெளிப்படுகின்றது, என்பது அவர்களது கொள்கை. அசோகரது அபிப்பிராயமோ தருமமானது ஜாதி வேறுபாட்டுக்களுக்கும் சமயச் சடங்குகளுக்கும் தெய்வத்தை பற்றிய கொள்கைகளுக்கும் புறம்பானது என்பது; அத்துடன், மானிட வாழ்கையின் தத்துவார்த்தத்தை விளக்கும் வாயிலாகத் தோன்றி வளர்ந்த பௌத்தக் கொள்கைகளாகிய மறுபிறப்பு, துக்கத்தைப் பற்றிய நான்கு உண்மைகள், நிர்வாண மூலம் விடுதலை பெறும் வழிகள், இவைகளைப் பற்றியும் அவரது தரும உபதேசங்களில் எங்கும் காணேம். அவர் கூறிய தருமம் உள்ளே பார்வையைச் செலுத்தி ஆராய்ந்து மனம் மாறுவதை அடிப்படையாகக் கொண்டது. தனி மனிதனின் செயல்களிலும் மக்கள் பரஸ்பர உறவுகளிலும் அதைக் காட்ட வேண்டும். இம்மையிலும் மறுமையிலும் சுகமே அதன் லக்ஷியம்.

கலிங்கப்போரில் விளைந்த ஹிம்ஸையினுலும் கொடுமையினுலும் பச்சாதாபம் உண்டாகி அதிலிருந்து தமக்குத் தருமத்தில் ஈடுபாடு ஏற்பட்டதாக அசோகர் கூறுகிருர். போரைப் பற்றிய அவரது சிந்தனைகளால் ஏற்பட்ட மன மாற்றமானது, ஒழுக்கச் சீர்திருத்தத்துக்கு வேண்டிய உள்ளாராய்ச்சியைத் தந்து, சாசனங்களை விடுக்க அவரைத் தூண்டியது. சாசனங்களில் எங்கும் செயலே அவரது இலட்சியம் என்பது தெரிகின்றது. தருமத்தை ஆராய்ந்தறிவதையும், தருமத்தைப் பின்பற்றி நடப்பதையும் அதைப் புகட்டுவதையும், அவர் தம் பணியாகக் கொண்டார். ஆயினும் இம்மூன்றும் பிரிக்க முடியாதவை. தருமத்தை ஆராய்ந்தறிவது அதைக்கிரியாம்சத்திற்காட்டுவதில் முடிகின்றது. தருமத்தைக் கடைப்பிடித்து ஒழுகுவது அதைப் புகட்டுவதற்கு வேண்டிய திருஷ்டாந்தங்களைத் தருகின்றது. அதைப் புகட்டுவதாவது, முதலில்

உபதேசத்தையும், கண்காணிப்பையும் நிர்வாகத்தையும் அதற்கு வேண்டிய ஸ்தாபனங்களையும் அபேக்ஷித்தாலும், முடிவில் சிந்தனையாலும் ஆய்ந்தறிவதாலுமே பெறக் கூடியது.

தருமத்தை ஆராய்ந்தறிவ தென்பது அன்றாடச் செயலின் ஆதாரங்களை நல்வழிப்படுத்தும் மனப்போக்குக்களையும் உத்தேசங்களையும் ஆராய்ந்தறிவதேயாகும். யுத்தத்தைப் பற்றிச் சிந்தனை செய்து அதனால் அசோகரிடம் ஏற்பட்ட மனமாற்றமே ஒழுக்கச் சீர்திருத்தங்களிலெல்லாம் அவர் உபயோகிக்கும் உள்ளுணர்வை அவருக்குக் கொடுத்தது. ஹிம்சையால் ஜயம் பெறும் ஆசையானது தருமத்தால் ஜயம் பெறவேண்டு மென்ற (தர்ம-விஜய) ஆசைக்கு இடங்கொடுத்து விலகிக் கொண்டால், ஒழுக்கப் போரில் யுத்தத்திற்குச்சரிநிகர் கிடைத்து விட்டதல்லவா? இப்படி ஏற்படும் போது கெட்ட காரியங்கள், நற்காரியங்கள் இவையிரண்டுமே மேன்மைப் படுத்தப் பெறும். உதாரணமாக, தானம் சிறந்ததே, ஆயினும் தருமதானத்துடன் ஒப்பிட்டால் மற்ற தானங்கலெல்லாம் அதற்கு ஈடாகா என்று ஆகிவிடும். தருமதானமானது தன் காரியமாக தருமத்தை ஆதாரமாகக்கொண்ட தருமப் பங்கீட்டுக் (தர்ம-ஸம்விபாகம்) கான அடிப்படையையும், தருமத்தை ஆதாரமாகக் கொண்ட மக்கள் பரஸ்பரம் பழகிக்கொள்ளுதலி (தர்ம-ஸம்ஸ்தவ)ன் அடிப்படையையும் தருமத்தை ஆதாரமாகக் கொண்ட மக்கள் உறவின் (தர்ம-ஸம்பந்தம்) அடிப்படையையும் உணர்த்துகிறது. இவ்வாறே, மதத்தில் பலவித ஸம்ஸ்காரங்களுக்குத் தனியிடம் இருப்பினும், தருமத்துடன் தொடர்பு கொண்ட ஸம்ஸ்காரம் (தர்ம-மங்கலம்) மற்றெல்லாக் கருமங்களையும் சடங்குகளையும் முக்கியமில்லாதவைகளாகச் செய்து விடுகிறது. இன்பமானது செயலுக்கு ஒரு தூண்டு கோலாக அமைவதேயாயினும், தருமத்தில் இன்ப (தர்ம-ரதி) மே உண்மை

யான இன்பமாகும். ஆகலின், அசோகர் வழக்கமாக அரச குலத்தவர் செய்யும் உல்லாச யாத்திரைகளை ஒதுக்கித் தரும யாத்திரை போவதில் இன்பத்தைக் கண்டார். சட்டத்தின் அடிப்படைகளையும் அதை நிர்வாகம் செய்வதற்கு வேண்டிய வழிகாட்டிகளையும் தருமத்திலேயே காணவேண்டும் ஆகலின், அசோகர் தருமப் பிரசாரத்திற்காகவும் அதைக் கண்காணிப்பதற்காகவும் ஒரு புது ரக மேலதிகாரிகளை (தருமமகா மாத்திரர்) நிறுவுவதன் மூலம் தரும நிர்வாக முறையை மாற்றியமைத்தார். மக்களை தருமத்தில் பற்றுக் கொள்ளச் செய்து அதன்படி நடக்கத் தூண்டுவதும் ஏற்கனவே தருமத்தில் ஈடுபட்டவரின் (தர்ம-யுக்தர்) தருமத்தை விருத்தி செய்வதும் (தர்ம-விருத்தி) அவர்களது வேலையாகும். தருமத்தில் பற்றுக் கொண்டவர் (தர்ம-நிச்ரிதர்) தருமத்தில் ஊன்றியவர் (தர்ம-அதிஷ்டிதர்) தானத்தில் ஈடுபாடுடையவர் (தான-சம்யுக்தர்) ஆகிய மூவகையினரும், தருமத்தில் ஈடுபட்டவ (தர்ம-யுக்த)ருள் அடங்குவர். தரும என்ற சொல்லை, ஒரு கிரியையுடனோ உத்தேசத்துடனோ உபயோகிக்கப் பெற்றுத் தருமத்தின் இலக்கணத்தைக் கூறுவதும், இவ்வாறு கூறப் பெறுவதில் தானே பொருள் மாறுவதும், ஒரு செயலையோ மனநிலையையோ கூறுவதுமான வேறொரு சொல்லுடன் இணைத்திருப்பதில், அசோகர் தருமத்தை ஆராய்ந்தறிந்ததின் அடையாளம் வாசக உருவில் சாசனங்களைப் படித்து வரும்போது புலப்படும். அசோகர் தம் உத்தேசத்தின் மூன்றுவித அம்சங்களைக் கூறும்போது, தருமத்தை ஆராய்ந்தறிவதிலும் (தர்ம பாலனம்) தருமத்தின் படி நடப்பதிலும் (தர்ம-கர்ம) தருமத்தைப் போதிப்பதிலும் (தர்ம-அனுசிஷ்டி) தமக்குள்ள ஆர்வத்தை வெளிப்படுத்த இந்த யுக்தியையே கையாளுகின்றார்.

தருமத்தை ஆராய்ந்தறிவதென்பது தருமத்தின்படி

நடந்து காட்டுவதின் அடிப்படை மட்டுமல்ல. அதுவே ஒரு செயலாகும். அதாவது அது செயலின் அடிப்படைத் தத்துவங்களின் மேல் செயல்படும் ஒரு செயலாகும். தார் மீகச்செயலுக்கு அடிப்படையான தன்னுராய்ச்சிக்காக வும், தரும முன்னேற்றத்துக்குக்காரணமான தன் முயற் சிக்காகவும், ஒருவரது கவனத்தைத்தன்னிடம் திருப்பு வதன் வாயிலாகத் தருமத்தை ஆராய்ந்தறிவதென்பது ஒருவரது அடிப்படைக் கொள்கைகளைப் புனிதமாக்குகின் றது. இவ்வாறு தம்மைத்தாமே அறிந்துகொள்வதானது மற்றவர் தருமத்தின் பொருளேக்காண உதவிய பல்வேறு வழிகளை உணர உதவுகின்றது. இவ்வாறு உணர்வதா னது சகிப்புத்தன்மைக்கும். உயிர் புனிதமானது என்ற கொள்கைக்கும் வேண்டியதான அடிப்படைத்தத்துவங் களாலேற்படும் பலத்தை அளிக்கின்றது. பிறர் அபிப்பி ராயங்களுக்கு மரியாதை கொடுப்பதென்பது தம்முடைய விருப்பங்களிலிருந்தும் கொள்கைகளிலிருந்து ஏற்படுவது என்பது மட்டுமல்ல. அது தம் விருப்பங்களேயும் கொள்கை களேயும் பரிசுத்தப்படுத்தவழியும் ஆகின்றது. தரும ஜய மானது உண்மையான புகழ் யாது என்பதை உணர்த்து கின்றது. தருமதானமானது மக்கள் யாவரும் ஓர் குலம் என்ற உணர்வின் வாயிலாக வெறும்பொருள்களின் உடைமைக்கும் தானத்திற்கும் கருத்தைக்கற்பிக்கின்றது. தரும ஈடுபாடானது சட்டமெல்லாவற்றுக்கும் ஒரு நோக் கத்தைக் கற்பித்து, உலகபோகங்களை உண்மையான இன்பத்துடன் இணைக்க வழிகோலுகின்றது. தத்துவ உணர்வும் தருமத்தில் பற்றும் மட்டில் இருந்துவிட்டால், தனிமனிதனின் செயல்களுக்கும் பொதுமக்களின் பரஸ்பர உறவுக்கும் தகுந்தவாறு தருமத்தின் இலக்கணத்தைத் திட்டவட்டமாகக் கூறிவிடலாம். கூடியவரை பாபகாரியங் களை ஒதுக்கி நிறைய நற்காரியங்கள் செய்வது, கெட்ட பழக்கங்களையும், கோபம் கொடுமை ஆத்திரம் கருவம்

பொறுமை ஆகிய மனவெழுச்சிகளையும் தவிர்ப்பது, அன்பு, ஈகை, ஸத்தியம், உள்ளும் புறமும் சுத்தம், பதவிசு, சாத்வீகம், பொருளைச்செலவு செய்வதிலும் சேர்ப்பதிலும் மிதம், தன்னடக்கம், இறக்கம், நன்றியறிவு, நட்பு, ஆகிய நங்குணங்களைப்பேணுவது, இவையே தனிமனிதனிடம் இருக்கவேண்டிய தருமங்கள். இவை யெல்லாம் நல்லொழுக்கத்தில் ஆசைகொண்டு அதைப் பற்றுவதின் வெளித்தோற்றங்கள். பொதுமக்களின் பரஸ் பர உறவில் தருமமானது ஒழுக்க நெறித்தொகுதியாக, அமைகின்றது. தாய் தந்தையர், மூத்தோர் ஆசிரியர், மேலதிகாரிகள் இவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடத்தல், ஆசிரியரிடம் மரியாதை, மதக்குரவர் துறவியர் சுற்றத் தார், அடிமைகள், சேவகர்கள் இவர்களையும், ஏழை பாழைகளையும், நண்பர் தெரிந்தவர் அண்டை அயலார் இவர்களையும், தகுந்தவாறு நடத்துதல், துறவியர் நண் பர் தோழர் சுற்றத்தார் வயோதிகர் இவர்களுக்கு வேண் டியதை வழங்குதல், உயிர்வதை செய்யாமை, என்ற இன்னெறிகள் பல சாசனங்களில் திரும்பத்திரும்பக் கூறப் பெறுகின்றன.

தருமத்தைக் கற்றறிவது, தருமத்தை ஒட்டிச்செயல் புரிவது, இவ்விரண்டும் அசோகரிடம் தருமத்தைப் புகட்டுவதில் உருவெடுத்தது. தருமத்தைப் புகட்டுவதற்கு, இதை இதைச் செய்யவேண்டுமென்று எடுத்துக்கூறுதல், சிந்தித்தல், ஆகிய இரண்டே வழிகள் உண்டு. இதை இதைச் செய்யவேண்டுமென்று எடுத்துக் கூறுதலோ, தம்மறிவும் தம்செயல்களின் விளைவுகளின் அறிவும் இன்றி, பச்சாத்தாபத்திற்கும் மனமாற்றத்திற்கும் பொருளைக் கொடுக்கின்ற தம் அடிப்படை உத்தேசங் களைப் பற்றிய சிந்தனை இன்றி, மனத்தில் வாங்கிக்கொள் வதற்கும் உத்தேசத்திற்கும் அஸ்திவாரமான தற்சிந் தனையின்றி, சிறிதும் பயன்படாது. அசோகர் நன்னெறி

புகட்டக் கடைப்பிடித்த வழியானது ஆவேசத்தையும் அடக்கத்தையும், தம் உயர்ந்த உதாரணத்தையும் நிர்வாகக்கட்டாயத்தையும், நுண்ணுணர்வுடனும் நுண்ணறிவுடனும் இணைத்துப்பொருத்திய ஒரு வழியாகும். உபதேசம் செய்வதற்காகவும் தவறினால் தண்டிப்பதற்காகவும், கௌரவங்களையும் தானங்களையும் வழங்குவதற்காகவும் அவர் தருமமகாமாத்திரர் என்ற அதிகாரிகளை நியமித்தார். தருமபரிபாலனத்தை மற்ற அலுவலர்களின் அலுவல்களில் ஒன்றாகவும் விதித்தார். அவரது சாசனங்களில் பல இப்படி இப்படிச் செய்யவேண்டும் என்று அதிகாரிகளுக்கு அவர் இட்ட கட்டளைகளாக அமைந்திருக்கின்றன. அவற்றில் அசோகர் தருமத்தில் கருத்துக்கொண்ட வசனங்களின் வாயிலாகத்தாம் நல்லதென்று கருதியதை அவ்வதிகாரிகள் செயலில் காண்பிக்க வேண்டுமென்றும், தகுந்தவழிகளிலேயே அதைச்செயல் படுத்தவேண்டுமென்றும் கூறுகின்றார். அவர் தம்மைப் புத்த மதத்தைத் தழுவியவராகக் கூறிக்கொள்வது உண்மையே. ஆயினும் தருமத்திலேதான் அவருக்குப் பற்று. தருமத்தைக் கூறும் பௌத்த நூல்களின் பெயர் கொண்ட ஒரு பட்டியலைத்தாமே தயார் செய்து அவர் பிக்ஷுக்களையும் பிக்ஷுணிகளையும் அவற்றைப் படித்தறியுமாறு கேட்டுக்கொள்ளுகின்றார். எல்லா மதங்களிடத்தும் சகிப்புத்தன்மை காட்டப்பெறுமென்று பிரகடனம் செய்கின்றார். மக்கள் யாவரையும் தம் குழந்தைகளாகப் பாவிக்கின்றார். பரஸ்பர நம்பிக்கை, தருமம், என்ற அடிப்படையில் கிட்ட இருப்பனவும் எட்ட இருப்பனவுமான எல்லாத் தேசங்களுடனும் ஒப்புறவை நாடுகின்றார். அவர்தம் மக்களின் உடல் நலத்திற்காகவும் சுக வாழ்வுக்காகவும் வேண்டிய பல ஏற்பாடுகளைச் செய்கின்றார்; நீதி பரிபாலனத்தைச் சீர்திருத்தி அமைக்கின்றார்; சமய அனுஷ்டானங்களுக்கு வேண்டிய வசதிகளைச்

செய்து கொடுக்கின்றார். அவர் தமக்கெதிராகச் செய்யப்பெறும் குற்றங்களைத்தாம் மன்னிக்கத் தயார் என்று கூறுகின்றார்; ஆனால் குற்றவாளிகள் திருந்தாவிடிலோ, மன்னிக்கமுடியாத குற்றங்களைப் புரிந்தாலோ, தண்டனை உண்டு என்று குறிப்பிட்டுரைக்கின்றார். இது இது செய்யப்பெறவேண்டுமென்றும், இதுஇது தம் குறிக்கோள்கள் என்றும், இது இது தண்டனைகள் என்றும், விளம்பரம் செய்கின்றார். அவர் உள்நோக்கின் அவசியத்தை ஒப்புக்கொள்ளுகின்றார். தம் உதாரணமே தம் அதிகாரத்தை விட மிக்கப் பயனளிக்கவல்லது என்பதிலும், அது காலத்தின் கட்டுப்பாடுகளையும் தம் இராச்சியத்தின் எல்லைகளையும் கடந்து நிற்குமென்பதிலும், நம்பிக்கை கொள்ளுகின்றார்.

அசோகரது சாசனங்கள் பல்வேறு பண்பாட்டுக்களின் ஆதார நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு பகுதியாகும். இந்நூல்கள் மக்களை அடக்கியாளுவதிலும் நாடு சேர்ப்பதிலும் பலத்தைத் தேடாமல், புலனடக்கத்திலும் மற்றவரைப் புரிந்துகொண்டு ஒப்ப நடப்பதிலும், அறிவுக்கு உட்பட்ட உண்மைகளையும் செயலுக்கு உட்பட்ட நற்காரியங்களையும் எண்ணிப் பார்ப்பதிலும், பலத்தைத் தேடுகின்றவை. இது சில சமயம் கலையாகவும் கவிதையாகவும், சிலசமயம் சமயச் சிந்தனையாகவும் தத்துவப்பரிசீலனையாகவும், சில சமயம் கலையாராய்ச்சியாகவும் விஞ்ஞான ஆராய்ச்சியாகவும், சிலசமயம் மக்கள் நலனுக்கு அவசியமான வழிகளும் வஸ்துக்களும் ஆக்கப்பெறவும் அடக்கப்பெறவும் உதவும் செயல்களாகவும், வெளிப்படும். இது சிலசமயம் ஒருதெய்வீக உலகையோ, கற்றோர் குடியரசையோ உலக மக்கள் யாவரையும்கொண்ட ஒருபொது நல இராச்சியத்தையோ, மானிட உலகில் மலிந்துகிடக்கும் போட்டிகளும் துர்ப்பழக்கங்களும் ஒழிந்த விஞ்ஞானிகள் கொண்ட ஒரு குழுவையோ, நிர்மாணிக்கும். சில

சமயம் இது ஞானிக்கோ சாதுவுக்கோ, அடக்கமுடையோருக்கோ பாபம் செய்தோருக்கோ, யாவருக்கும் வழி காட்டி, அவர்களை விதியின் விளையாட்டோ அதிகாரத்தின் விரட்டலோ பாதிக்காவண்ணம் காக்க உதவும் நடைமுறைகளை ஆக்கித்தரும். சில சமயம் இது மற்றச் சமூகங்களில் கிடைக்காதவையும், அவர்கள் மனதால் கூட நினைக்காதவையுமான பேற்றுக்களைப் பெறும் பொருட்டு, மக்களது தளைகளை நீக்கி, சமூகங்களைத்திருத்தியமைக்க உதவும் உள்ளறிவையும் ஊக்க நிலைகளையும் ஆக்கிக் கொடுக்கும்.

இத்தொகுதியில் அடங்கிய சிறந்த நூல்கள் இன்றைய உலகில் ஒரு புதிய முக்கியத்துவத்தை அடைந்து, ஒரு புதிய சக்தியாகத் திகழவல்லவை. அவை அபிப்பிராய பேதங்களைச் சகித்துக்கொள்ளும் குறிக்கோளை அன்று போல் இன்றும் நம்முன் நிறுத்தவல்லவை. ஒரு வகைப் புதிய சமூகங்களை ஆக்குவதற்கு அவை வழிகோலும். இப்புதிய சமூகங்கள் வேற்றுமையிலிருந்தும் சுயேச்சையிலிருந்தும் பலம் பெறும்; வேற்றுமையின் அடிப்படையிலும் சகிப்புத்தன்மையின் அடிப்படையிலும் எழுப்பப்பெற்ற இவற்றுக்கு இன்றைய உலகநிலை நம்மீது சுமத்தும் கடமை உணர்ச்சியே வழிகாட்டும். போக்குவரவு சாதனங்களின் பெருக்கத்தால் ஏதாவதொரு வகையில் உலகம் சேர்ந்து வாழவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. சகிப்பு, நியாய உணர்ச்சி, அன்பு இவற்றின் மெய்யுணர்வும், கவிகள், சாதுக்கள், தத்துவஞானிகள், அரசியல் வல்லுனர் இவர்களது அறிவுரைகளிலிருந்து கிடைக்கும் அறிவுத்திறனின் மெய்யுணர்வும், உலகை உண்மையான உறவின் அடிப்படையில் அமைக்கப்பெற்ற உண்மையான சமூகமாக ஆக்க வழி செய்யும். இத்தகைய மெய்யுணர்வானது ஊடாடலின் அபிவிருத்தியின் மற்றொரு விளைவான அதிகாரப் போராட்டத்திற்கு உதவக்கூடிய

ஆயுதம் ஒன்றையும் ஆக்கித்தராது. அதிகாரப்போராட்டங்களில் ஒரு கட்சியும் வெற்றி பெறுவதில்லை. அப்போராட்டங்கள் அவற்றில் ஈடுபடும் கட்சிகளுடன் பெரும்பாலும் மறைந்து விடுகின்றன, மறக்கப்பெறுகின்றன, அல்லது, மறைந்த அவற்றுக்கு ஞாபகச்சின்னமேபோல் அவை எழுதி வைக்கப்படுகின்றன. அவற்றின் காரணங்களோ சமாதானத்தாலும் ஒழுங்காலும் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளும் மனப்பான்மையாலும் நசித்து விடுகின்றன.

ரிச்சர்டு மக்கியோன்

# முகவுரை

அசோகரது சாசனங்களை இங்கு பதிப்பிப்பதற்கு இரண்டு உத்தேசங்கள் உண்டு. ஒன்று இவை எளிய சொக்க ஆங்கிலத்தில் யாவர்க்கும் கிடைக்க வேண்டு மென்பது. மற்றது இவற்றின் உபதேசங்களை யாவரும் அறியும்படி தொகுத்துக் கொடுப்பது. சாசனங்களின் மொழிபெயர்ப்புக்கள் பல கிடைக்கின்றன. ஆனல் பல காரணங்களால் மொழிபெயர்ப்பாளர் அசோகரது உயர்ந்த குறிக்கோள்களையும் அவர் பற்றிய நேர் முறைகளையும் அவரது எண்ணங்களுக்கேற்ற பாஷையில் கூருமல் விட்டனர். சிதைவுற்றுச் சிறிதே மிகுந்திருக்கும் பல பகுதிகளிலும் சொல் உள்ளபடி உரைகூற ஆசைப்படுவதும், வாசகத்தின் போக்கையும் சொல் முறையையும் அப்படியப்படியே காட்ட விரும்புவதும், அக்காலத்துச்சூழ்நிலையையும் மன நிலைகளையும் உள்ளபடியே படம் பிடித்துக்காட்ட எண்ணுவதும் அக்காரணங்களுள் சிலவாகும். இம்மொழி பெயர்ப்போ, பொருள் மாற்றம் சிறிதுமின்றியும், காலமுரண்பாடு ஏதுமின்றியும், சாசனங்களைத் தற்கால ரீதியில் கூறும் நோக்குடையது. பழஞ்சொற்களும் முன்பின்னுகக்கூறுவதும் இதில் விலக்கப்பெற்றிருக்கின்றன. சொல் மாருமல் ஜாக்கிரதையாகச் செய்யப்பெற்ற சில மொழிப்பெயர்ப்புக்களிலும் கூட அவசியமெனக் கருதி மறைவாகக் கூறப்பெற்றிருக்கும் ஊகப் பொருள்களையும், அவதாரிகைகளையும், இந்த மொழி பெயர்ப்பு வெளிப்படையாகவே கூறும்.

சாசனங்களைப் புதைபொருள்வகுப்புக்கிணங்கவும் பூமியில் அவையிருக்கும் ஸ்தலத்திற் கிணங்கவும், பாறைச்சாசனங்கள் தூண் சாசனங்கள் குகைச்சாச

னங்கள் என வரிசைப் படுத்துவது வழக்கம். ஆனால் இப் பதிப்பில் அவை ஒரு தொடர்ச்சியான கதையைக்கூறும் வண்ணமாகத் தொகுக்கப்பெற்றிருக்கின்றன. I இச் சாசனங்களைப் பற்றியும், அவற்றின் ஒன்றுக்கொன்று சம் பந்தத்தைப் பற்றியும், அவை ஏற்பட்ட சந்தர்ப்பங் களுடன் அவற்றின் தொடர்பைப்பற்றியும், அசோகர் விவரிப்பது. II சாசனங்களில் வெளியாகும் அவரது உத்தேசங்களை உருவாக்கிய கலிங்கப்போரைப்பற்றி அவர் கூறும் வரலாறு. III தருமம் அல்லது அறநெறியை அவர் பிரகடனம் செய்ததன் நோக்கம். IV இக்குறிக் கோளை அவர் அமுலாக்க உபயோகித்த வழிகள். V தரு மத்திற்கு அவர் கொடுத்த பொருள். VI பொதுவாகவும் சிறப்பாகவும் தருமத்தின் பிரயோகங்கள்.

இத்தொகுத்தல் முறையின் உத்தேசம் தாமே சாசனங் களையும் அவற்றின் உட்கருத்தையும் அறிந்துகொள்ள வாசிப்போருக்கு வழிசெய்து கொடுப்பதே. அவை ஒரு தனி தருமசாஸ்திரம் என்ற உணர்வை உண்டாக்கவோ, ஒரு கொள்கையை அவற்றின் மேல் சுமத்தவோ அல்ல. சாசனங்கள் தாமே பேசவேண்டும். பெரும்பாலும் ஒவ் வொரு சாசனமும் முழுதாகவே மொழிபெயர்க்கப்பெற்றி ருக்கிறது. துண்சாசனம் VII, பாறைச் சாசனம் V ம் X ம், மாஸ்கீ பாறைச்சாசனம், ஆகிய நீண்ட சாசனங் கள் நான்கும் மேலேகூறிய தொகுப்புக்கு இசையும்படி பகுக்கப்பெற்றிருக்கின்றன. ஆனால் பெரும்பாலும், சாசனங்களின் விஷயங்கள் அவை வைக்கப்பட்டிருக்கும் பகுதிக்குச் சற்று புறம்பாகச் சென்றாலும், அவை சேர்ந்து ஒன்றாக இருக்கும்படியாகவே அச்சிடப்பெற்றிருக் கின்றன. பகுக்கப்பட்ட நான்கு சாசனங்களின் பகுதிகள் வைக்கப்பட்டிருக்கும் ஸ்தானங்களும் தொடர்புகளும், சாசனப்பதிப்பிலும் விஷய அட்டவணையிலும் தெளிவாகக் காட்டப்பெற்றிருக்கின்றன. சாசனங்கள் என்ற தன்மை

யில், அதாவது அவற்றின் செயல்படுமுறை, நோக்கங்கள், அடிப்படைகள் ஆகியவற்றில், அவற்றை எளிதாகப்புரிந்து கொள்வதே இப்புதிய தொகுப்பு முறைக்குப்பயனுகக் கொள்ளவேண்டும். அவற்றை ஒரு தருமசாஸ்திர மாகவோ, தரிசனமாகவோ, ஒரு சமயக்கொள்கைகளின் தொகுப்பாகவோ, கொள்வது கூடாது. சாசனங்களைப் பற்றி விரிவாக அறிந்து கொள்ளவேண்டிய விஷயமெல் லாம் நூன்முகக்திற் கூறப்பெற்றுள்ளது. தருமத்தைப்பற் றிய அசோகரது சிந்தனைகளை முன்னுரையில் காணலாம்.

அசோகரது சாசனங்கள் இன்றைய உலக நிலைக் குப் பொருந்தும்படி அமைந்திருக்கின்றன. சமூகத் தின் பல பகுதிகட்குள்ளும், சமயப் பகுதிகட்குள் ளும், ஜனப் பகுதிகட்குள்ளும், தேசங்களுக்குள்ளும், நிலவிய பரஸ்பர விரோதமும் பயமும் பெரும் பிரச்சினையாக அசோகர் முன் நின்றன. மக்கள் நலனை யும் இன்பத்தையும் பேணுவதன் வாயிலாக யுத்தத்தைத் தவிர்க்க அவர் ஒரு ஆக்கமுறைக் கொள்கையைக்காண விரும்பினுர். அவர் மிருக பலத்தால் கிடைக்கும் வெற்றியைவிடுத்து, நன்னெறிமுறையின்பேரில், தருமத் தின் பேரில், மானிட சமூகத்தின் உறவை நிலைநிறுத்த முயன்ருர்; அவர் சமயச்சடங்குகளைப் புனிதமாக்கவும், தருமத்தைப்பற்றிய பல்வேறு கருத்துக்களிலும் உட்கிடை யாகக் கிடக்கும் நன்னெறியாகிய பொதுவான குறிக் கோளை உணர்த்துவதன்மூலம் கொள்கைச் சண்டைகளை யும் மதச்சகிப்பின்மையையும் நீக்குவதற்கும், விரும் பினுர்; கட்டாயத்தாலும் விதிகளாலும் அல்லாமல், (இவை பயனற்றவை என்பதை அவர் அறிவார்,) ஆழ்ந்து சிந்தனை செய்து உள்ளறிவு பெரும் வாயிலாகவே அவர் நல்லொழுக்கம் ஓங்கும் முறையைக் காண விரும் பினுர். (இதனுல் அவர் மற்றவர்க்கு மதிப்புக்கொடுக்க வேண்டும், நற் கருமங்கள் செய்யவேண்டும், என்ற

ஒன்றைவிட்டு ஒன்று அமையாத இவ்விருகடமைகளின் உருவில் நன்னெறி, அரசியல், சமயம் இம்முன்றையும் மாற்றியமைக்க முயற்சித்தார்.) இந்தியா முழுதுமட்டு மின்றி, அதன் எல்லைக்கு மூவாயிரம் மைல் அப்பாலும் உள்ள மிக்க அகன்ற பூகோளப்பரப்பில் தம் குறிக்கோள் செயல்படவேண்டுமென்பது அசோகர் தீர்க்க விரும்பிய பிரச்சினை. இவ்வாறே இன்றைய பிரச்சினையும் மக்கள் யாவரையும் பற்றியது, மக்கள் பொதுநலச் சமூகத்தைப் பற்றியது, உலக சமூக உறவைப்பற்றியது. அசோகர் தெரிந்துகொண்டவாறே இதுவும், பரஸ்பர உறவை நிலை நிறுத்த உதவும் பொதுக்குறிக் கோள்களை எவ்வாறு தெளிவு படுத்தலாம், அப்பொதுநோக்கைப்பற்றிய பல தரப்பட்ட அபிப்பிராயங்களை எவ்வாறு தடைக்கும் பிரிவுக்கும் காரணமாக்காமல் செறிவுக்கும் சேர்க்கைக்கும் காரணமாக்கலாம், என்ற நன்னெறி குறித்த பிரச்சினை யாகும்.

இம்மொழிபெயர்ப்பைப்படித்துக் குற்றங்குறைகளை ஆராய்ந்து சொன்ன சர்வதேசத்தத்துவ இயற்கழகத் தைச் சேர்ந்த எங்கள் சகாக்களான பேராசிரியர்கள் ரேமன்ட் க்லிமான்ஸ்கி (மாக்கில் சர்வகலாசாலை, மான்ட் ரீல், கனடா,) எ. ஜெ. அய்யர், (யூனிவர்ஸிடி காலேஜ், லண்டன், இங்கிலாந்து,) ஜூலியஸ் எப்பிங்கௌஸ் (மார் பர்க், ஜெர்மனி,) டாக்டர் எ. ஸி. யூவிங், (கேம்ப்ரிட்ஜ், இங்கிலாந்து,) இவர்களுக்கு நாங்கள் நன்றி கூறு கின்றோம்.

இப்பதிப்பைத்தயார் செய்வதற்காக நாங்கள் பின் வரும் நூற்பதிப்புக்களைப் பார்த்திருக்கின்றோம் ; சாசனங் களின் பாடபேதங்களையும் வியாக்கியானங்களையும் அறிய விரும்பும் வாசகர் அவற்றைப்பார்க்க:

பி. எம். பருஆ, அசோகரும் அவரது கல்வெட்டுக்களும் (கல்கத்தா : ந்யூ ஏஜ் பப்ளிஷர்ஸ், 1946)

ஜூல்ஸ் ப்ளாக், லெஸ் இன்ஸ்க்ரிப்ஷன்ஸ் டி அசோகா (பாரீஸ், லெஸ் பெல்ஸ் லெட்டர்ஸ் 1950)

இ ஹுல்ட்ஸ்க், இன்ஸ்க்ரிப்ஷன்ஸ் அப் அசோகா, கார்ப்பஸ் இன்ஸ்க்ரிப்டியோனம் இன்டிகாரம், வால் I (ஆக்ஸ்போர்டு: க்ளா ரண்டன் ப்ரெஸ் 1925)

ராதாகுமுத் மூகர்ஜி, அசோகா (லண்டன் : மாக்மில்லன் அண் கோ, 1928).

ஜி. ஸ்ரீநிவாஸமூர்த்தியும் எ. என். க்ருஷ்ண அய்யங்காரும், தி எடிக்ட்ஸ் அப் அசோகா (ப்ரியதர்சின்), (இரண்டாம் பதிப்பு, மதராஸ் : அடயார் லைப்ரரி, 1951).

ராமாவதார சர்மா, பியதஸி இன்ஸ்கிரிப்ஷன்ஸ், பாட்னு, 1917).

டபிள்யூ ஷுமேகர், டை எடிக்டே டெஸ் கெய்ஸர்ஸ் அசோக (1948).

அமூல்யசந்த்ரஸேன், அசோகாஸ் எடிக்ட்ஸ் (கல்கத்தா : இந்தியன் பப்ளிஸிடி ஸொஸைடி, 1956).

டி. ஸி. ஸர்கார், இன்ஸ்க்ரிப்ஷன்ஸ் அப் அசோகா (டெல்லி கவர்மெண்ட் அப் இந்தியன் பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், 1957).

வின்ஸண்ட் எ. ஸ்மித் அசோகா: தி புத்திஸ்ட் எம்பரர் அப் இந்தியா (மூன்றும்பதிப்பு, ஆக்ஸ்போர்டு, க்லாரெண்டன் ப்ரஸ், 1920).

எ. ஸி. வுல்னர், அசோகா, டெக்ஸ்ட் அண்டு க்ளாஸ்ஸரி, வால் I-ம் II-ம், (ஆக்ஸ்போர்டு : ஆக்ஸ்போர்டு யூனிவர்ஸிடி ப்ரஸ் (1924).

கொல்ஹாபூர் ராஜாராம் காலேஜ் ஸம்ஸ்கிருதப் பேரா சிரியர் டாக்டர் எ. என். உபாத்யே, எம். எ. டி. லிட். அவர்களது துணையைக்கொண்டு மூலப்பாடங்களை வாசித்து, இப்போது கிடைக்கும் மொழிபெயர்ப்புக்களை யும் உபயோகித்து, நாங்கள் தனியாக ஒரு பாடத்தைத் தயாரித்தோம். இன்னூலைத்தயாரிப்பதில் மைசூர் மகா ராஜா கல்லூரிப் பாஷைநூல் உதவிப்பேராசிரியர் ஸ்ரீ கெ. வி. ராகவாசார் எம். எ. அவர்கள் எங்களுக்குப் பெரிதும் உதவியிருக்கின்றனர். சிகாகோ ஸர்வகலாசாலையைச் சேர்ந்த பேராசிரியர் ஜ்யார்ஜ் வி. பாப்ரின் ஸ்காய் அவர் களும் டாக்டர் ஹான்ஸ்வான் ப்யுடெளன் அவர்களும்

அளித்த பலயோசனைகளும் விமர்சனங்களும் எங்களுக்கு மிகுந்த பயனளித்திருக்கின்றன.

அசோக சாசனங்களின் இப்பதிப்பானது, 'தத்துவ இயலும் உலக சமூக வாழ்க்கையும்' என்ற தலைப்பின்கீழ் சர்வதேசத்து இயற்கழகத்தோரால் திட்டமிடப்பட்ட நூல் தொகுதிகளில் ஒன்றாகும். ஒரு சில நூல்களைப் பொறுக்கி யெடுத்து அவற்றை எத்தனை பாஷைகளில் மொழி பெயர்க்கமுடியுமோ அத்தனையிலும் மொழிபெயர்த்து வெளியிடுவது அவர்களது நோக்கம். ஜி. கெலோ கெரோ (ரோம்), ஜெ. எப்பிங்கௌஸ் (மார்பர்க்-லா ஹன்), ஆர். கில் ப்ளான்ஸ்கி (மான்ட்ரீல்), தலைவர் ஜெ. லமீரெ (ப்ரஸ் ஸல்ஸ்), ஆர். மக்கியோன் (சிகாகோ), ஆகிய இவர்கள் கொண்ட ஒரு ஆசிரியர் குழு இத்தொகுதியைத்திட்ட மிட்டது. இதில் வெளிவந்த முதற்புத்தகம் ஜான் லாக் எழுதிய **எ லெட்டர் கன்ஸர்னிங் டாலெரேஷன்** (சகிப்பு பற்றிய ஒரு கடிதம்) என்பதன் ஜெர்மன் மொழிபெயர்ப்பு. அசோக சாசனங்களின் இந்த ஆங்கில மொழிபெயர்ப்பு இதில் வெளிவரும் இரண்டாம் புத்தகம்.

தத்துவ இயற்சங்கங்களின் சர்வதேசக்கூட்டு ஸ்தா பனத்தின் சிபார்சின்பேரில் தத்துவ இயற்கல்விக்காகவும் மானிடக்கல்விகளுக்காகவும் ஏற்பட்ட சபையினரிட மிருந்து பெற்ற பொருளுதவி கொண்டு, இச்சர்வதேச தத்துவஇயற்கழகம் **அசோக சாசனங்கள்** என்ற இந்நூலின் கைப்பிரதியைத் தயாரித்து வெளியிட்டது.

என். ஏ. நிகாம்
ரிச்சர்டு மக்கியோன்

மைசூர் சர்வகலாசாலை
சிகாகோ சர்வகலாசாலை

# பொருளடக்கம்

# நூன்முகம்

இந்தியப் பேரரசர்களில் மிகச் சிறந்தவருள் ஒருவர் அசோகர் (சுமார் கி.மு. 274-232). இவர் மௌரிய அரச வம்சத்தை ஸ்தாபித்த சந்திரகுப்த மௌரியரின் பேரன். எழுத்துவாயிலான சரித்திர ஆதாரக்குறைவால் அசோகரைப் போன்று இந்தியச் சரித்திரத்தில் மிக முக்கியமானவர்களுடைய குணம், வரலாறு இவற்றைக் கூடத் தெரிந்து கூறுவது கடினமாயிருக்கின்றது. சந்திர குப்தர் தம் பேரரசை நிறுவியதும் (கி.மு. 322), மகா அலக்சாண்டர் இறந்து போனதும் (கி.மு. 323), அநேக மாக ஒரே காலமாகும். செலியூகஸ் அரசரின் தூதரான மெகஸ்தனீஸ் என்பவரால் எழுதப்பெற்ற சந்திரகுப்தரின் அவை, ஆட்சி முறை, இவற்றைப்பற்றிய வரலாறுகள் கிரேக்க ரோமானியச் சரித்திராசிரியர்களின் நூல்களில் துணுக்குகளாக இன்றும் கிடைக்கின்றன. ஆனல் அசோகரது ஆட்சியைப்பற்றிய வரலாற்றுக்களில் மிகப் பழமையானவை சிங்களத்திலும் இந்தியாவிலும் முன்னர் வாழ்ந்த பௌத்தப்பழஞ்சரித்திரக் குறிப்பாளர் எழுதி வைத்துள்ள குறிப்புக்கள் மட்டிலேயே காணப்படு கின்றன. ஆயினும், என்றும் நிலைத்து நிற்கும் என்ற நம்பிக்கையுடன் அசோகர் கற்களில் பொறிக்கப்பெற்ற சிலவகை ஆதாரங்களை விடுத்துச்சென்றார். அவை தம் ஞாபகார்த்தமாகவோ, தம்வீரச்செயல்களை மக்கள் மறவா திருக்க வேண்டுமென்றோ ஏற்படுத்தப்பெற்றவை அல்ல. அறநெறியையும், அதை விளம்பரப்படுத்தத் தூண்டிய தம் அனுபவத்தையும், அவற்றுக்கு விளக்கம் தந்து உப தேச உருவத்தை அடைவித்த சிந்தனைகளையும், எழுதி வைப்பதற்காகவே அவை ஏற்பட்டன. 'அறநெறிப்

பதிவுகள்' (தரும லிபி) என்று சிலவிடங்களிலும், 'அறநெறிவிளம்பரம்' (தருமசிராவணம்) என்று சில விடங்களிலும், அவர் இக்கல்வெட்டுக்களைக் குறிப்பிடு கின்றார். தம்மக்கட்கும் பின்னோர்க்கும் இவை தூண்டு கோலாகவும் வழிகாட்டியாகவும் அமைவதற்காக என்றும் நிலைத்திருக்கவேண்டும் என்ற விருப்பத்தை அவர் வெளிப்படுத்துகின்றார்.

இக்கல்வெட்டுக்களில் பல இன்றும் இருக்கின்றன. ஆனால் மௌரிய அரசவம்சம் அசோகர் இறந்து சுமார் ஐம்பது ஆண்டுகளுள் முடிந்துவிட்டதால் அவரது வமிசத்தில் பின்னோர்க்கு இது வழிகாட்டியாக அமையக் கூடவில்லை. பிராகிருதம் பேச்சு வழக்கற்றுப் போன பிறகு இக்கல்வெட்டுக்களை மக்கள் புரிந்து கொள்ள முடியாமற்போனமையாலும், அசோகரைப்பற்றிய பழங் கதைகள் இக்கல்வெட்டுக்களில் உள்ள விஷயங்களை வற்புறுத்திக்கூறி, இவற்றின் பெருமையை உணர்த்தா மையாலும், இவைபொது மக்களின் நல்லொழுக்கத் திற்கு வழிகாட்டியாகவும் அமையக்கூடவில்லை. இந்தி யாவைக் காணவந்த பாஹியென் (Fa Hien கி.பி. 401-10), ஹியுவென்த்ஸாங் Hiuen Tsang அல்லது யுவான் சுவாங் (Yuan Chwang கி.பி. 629-45), என்ற இரு சீன பௌத்த யாத்திரீகர்களும் அசோகரது அரண்மனையின் எஞ்சிய சின்னங்களையும் மற்றக் கட்டிடங்களையும் வருணிக்கின்றார்கள். ஆனால் அசோகரைப்பற்றிய பழங் கதைகளின் மணமே அவற்றுள் வீசுகின்றதேயல்லாது, மேற்கண்ட அசோகரது சிலா சாசனங்களை அவர்கள் அறிந்துகொண்டதாகவே அவற்றிலிருந்து விளங்கவில்லை. பாஹியென் ஆறு தூண்களைக்கண்டார். ஹியுவென் த்ஸாங் பதினைந்து தூண்களைப்பற்றியும் கூறியுள்ளார். இவற்றுள் ஒரு சிலவே - நான்கோ ஐந்தோமட்டில் - தற் போது கிடைத்திருக்கும் தூண்களுடன் ஒப்பிட்டு, இவை

தான் அவை, என்று தீர்மானமாகச் சொல்லக்கூடியவை. அசோகர் கல்வெட்டுக்களுடன் கூடிய தூண்கள், வெற்றுத்தூண்கள், ஆகிய இருவகைத் தூண்களையும் நாட்டினர். இப்பொழுது கிடைத்திருக்கும் கல்வெட்டுத் தூண்களில் இரண்டேதான் ஹியுவென்த்ஸாங் கூறியவற்றுள் சேர்ந்தவையென்று திண்ணமாகக் கூறக் கூடியவை. மீரட்டிலும் தோப்ராவிலும் நாட்டப் பெற்றிருந்த தூண்கள் தி (பி) ரூஜ்ஷா (D (F) iruz Shah.) 1351-88) என்ற சுல்தானால் தில்லிக்கு அப்புறப்படுத்தப் பெற்றன. கௌசாம்பியில் நாட்டப்பெற்றதூண் அலகாபாத்துக்கு அப்புறப்படுத்தப்பெற்றது. (இதைச் செய்தது அநேகமாய் அக்பர் சக்கரவர்தியாயிருக்கலாம்). மக்கள் குடியிருப்புக்கள் மாறிவிட்டமையால், பெரும்பாலான கல்வெட்டுக்கள் காடு கொள்ளப்பெற்று மறைந்துவிட்டன. அவை இருந்தவிடமும் இப்போது விளங்கவில்லை.

மேற்கூறப்பெற்ற காரணங்களால் சிறிது காலத்திற்கு முன்பே அசோகரது சாசனங்களைப்பற்றி நாம் அறிந்து கொள்ள முடிந்தது. டியெப்பென்தாலெர் (Tieffenthaler) என்ற ரோமன்கத்தோலிக்கப் பாதிரியார் தில்லியிலுள்ள மீரட்டுத் தூணின் உடைந்த பகுதிகளை ஆராய்ந்து முதன் முதலாகத் தற்காலத்தில் இத்தூண்கல்வெட்டுக்களைப் படித்து அவைகளைப் பற்றி எழுத ஆரம்பித்தார். அசோக லிபியை முதலில் புரிந்து கூறியவர் 1837ல் ஜேம்ஸ் பிரின்ஸெப் என்பவரே. அக்காலம் தொடங்கி இக்கல்வெட்டுக்கள் பல கண்டுபிடிக்கப்பெற்று வெளிப்படுத்தப் பெற்றுப் பொருளும் கூறப்பெற்றன. ஒருவிதத்தில், இச்சாசனங்களைவிடுத்த அரசரின் குணங்களே இவற்றின் வாயிலாகத் தெள்ளெனத்தெரிகின்றன எனலாம். மதி நுட்பத்துடன் கூடிய முதிர்ந்த அறிவு; நல்லது தீயது என்ற பகுத்தறிவும் நிர்வாகத்திறனும் ஒருங்கே

அமைந்து, அக்காலத்தில் வேற்றிடத்திற்காணப் பெருததும், பிற்காலத்திலும் அவரைப்போல் அதிகாரம் படைத்த எவராலும் மிஞ்சப்பெருததுமான சகிப்புத் தன்மை; தருமநெறியில் கண்ணும் கருத்துமாய் நிற்கு மாறு தம்மக்களை ஊக்குவித்து, அவர் மனத்தைச்சிற்றின் பங்களிலிருந்தும் பொருளாசையிலிருந்தும் வரட்டுக் கௌரவத்திலிருந்தும் திருப்புவதுடன் நில்லாமல், அவர்கள் இவ்வுலகிலும் சுகமாக வாழ்ந்து களிப்புற்றிருக்க வேண்டும் என்ற கவலை; மக்கள் தம்தம் குறிக்கோள் களைப் பலவாற்ருலும் அடையவேண்டியிருப்பினும் மானிட சமூகங்கள் யாவும் சண்டையிடாமல் வாழக்கூடும் என்ற திடநம்பிக்சை; மானிடரெல்லாம் ஓர் இனம், உயிரினம் யாவும் மதிப்பிற்குரியன, என்றவுணர்வு; ஆகிய இவையே மேற்கூறியபடி அறியக்கிடக்கும் அசோ கரது குணங்களாகும். உண்மை இவ்வாறிருப்பினும், இக்கல்வெட்டுக்களின் தனிப்பட்ட தன்மையே இவற் றுக்குப்பொருள் கூறுவோரின் மனத்தைப் பலவாறு கவர்ந்து, அசோகர் மதப்பிரசாரகருள் ஒருவர் என்றும், குறிப்பிட்ட ஒரு மதப்பகுதியை ஆதரித்த அரசர் என்றும், பேரரசை நிறுவித்திறம்பட ஆளுவதிலேயே நோக்கம் கொண்டவர் என்றும், வேதாந்தப் பற்றுக்கொண்ட இராசரிஷியென்றும், தோன்றுமாறு சிற்சில தன்மைகளை மட்டில் அழுத்திக் கூறும்படியும், பல்வேறு பெரியோர் களுடன் ஒப்புமை கூறும்படியும் செய்துவிட்டது. ஆயி னும், இப்பெரியோர்க்கும் அசோகர்க்கும் உள்ள வேற்றுமையானது இவர்கள் காணும் ஒற்றுமைக்குச் சற்றேனும் குறைந்ததல்ல.

பழங்கதைகளிலிருந்து கிடைக்கும் அசோகரது வாழ்க்கை நிகழ்ச்சிகளும் அவரது தன்மையும் கல் வெட்டுக்களிலிருந்து அறியக்கூடியவற்றுக்குப் பெரும் பாலும் ஒத்ததல்ல. அவற்றுக்குச் சரித்திரச் சான்று

களும் கிடையா. அவை நம்பத் தகாதனவாயும் இருக்கின்றன. ஆயினும் அவற்றைக் கொண்டே சிலர் கல்வெட்டுகளுக்குப் பொருள் காண்கின்றனர். இவர்கள் சொல்வது இளமைப்பருவத்தில் தம் உடன்பிறந்தோர் நூற்றுவரில் தொண்ணூற்றென்பதின்மரைக் கொலை செய்து சொல்லொணுத் தீச்செயல்புரிந்த ஒரு கொடுங்கோலனின் கதை. அவன் புத்தமதத்திற்குமாறிய வரலாறும், அதன்பின் இந்தியாவிலும் சிங்களத்திலும் அம்மதத்தைப்பரப்புவதில் அவன் கொண்ட ஆர்வமும், அதன் பயனுகக் 'கெட்ட அசோகன்' என்ற பெயர் நீங்கி அவன் தரும அசோகன் என்று பெயர் மெற்றதும், அவர் கூறும் கதையின் முடிவாகும். ஆனுல் கல்வெட்டுக்களிலிருந்து அசோகர் மதம்மாறி ஒரு சிராவகனுக (lay disciple) ஆகிய கதைமட்டில் கிடைக்கின்றது. அவர் எம்மதத்திலும் சகிப்புத்தன்மையுடன் நடந்துகொள்வதை வற்புறுத்துவதிலேயே அதிக நோக்கம் கொண்டவராகத் தெரிகிறதேயன்றி, ஒரு குறிப்பிட்ட மதத்தைப் பரப்பும் நோக்கம் கொண்டவராக அவற்றிலிருந்து அவ்வளவாக அறியக்கூடவில்லை. மேலும், தருமத்தில் கண்ணும் கருத்துமாயிருந்து கொண்டு, பௌத்தர்களிடையேயுள்ள மத வேற்றுமைகளை அகற்றுவதில் அவசியத்தைப் பௌத்தர்களுக்கு உணர்த்தும் உருவிலேயே புத்தமதத்தில் அவர்கொண்ட ஆர்வம் அமைந்திருந்தது நன்கு புலப்படுகின்றது.

அசோகரை இஸ்ரேல் நாட்டரசரான டேவிட்டுக்கும் ஸோலமோனுக்கும் சிலர் ஒப்பிடுகின்னர். இது அவ்வளவாகப் பொருந்தாது. டேவிட்டைப்போல் அவர் அண்டைநாடுகளுடன் தொடர்ந்த போர்களிலோ படையையும் ஆட்சி முறையையும் புதிதாக நிறுவுவதிலோ ஈடுபடவில்லை. தெய்வழிபாட்டில் சங்கீதம், ஸாம் (Psalm) ஓதுதல் முதலியன போன்ற புதுமைகளைப் புகுத்தவு

மில்லே. ஸோலமோனைப்போல் அவர் செல்வத்திலும் ஆடம்பரப் பொருள்களிலும் நாட்டம் கொண்ட ஒரு கவியல்ல. வாணிபத்தை விருத்திசெய்வதில் ஸோலமோனுக்குள்ள தனித்திறனும் அவரிடம் இருந்ததாகத் தெரியவில்லை. இஸ்லாம் மதத்தை முதலில் எதிர்த்துப் பின்னர் அதற்கே மாறிவிட்ட காலிப் உமாருக்கு அவரைச் சிலர் ஒப்பிடுகின்றனர். ஆனல் அசோகரைப்போலல்லாமல் உமார் நாடுபிடிப்பதிலேயே நாட்டம் கொண்டு, படைப்பலமும் மதமும் கலந்த அடிப்படையின் பேரில் ஓர் பொது நலப் பேரரசை எழுப்பியவர்; குர்ஆனை முதன் முதலில் தொகுக்கவும் உதவியவர். பல காரணங்களால் அசோகரைச் சிலர் மகா கான்ஸ்டண்டைன் சக்கரவர்த்தியுடன் ஒப்பிடுகின்றனர். கான்ஸ்டண்டைன் கி. பி. 313ல் 'மிலான் சாசனத்தை' விடுத்ததும் அதன் மூலம் ரோம சாம்ராஜ்ஜியம் கிறிஸ்துவ மதத்தை ஏற்றதும், பின்னர் 'முதல் நிகேயியா (Nicaea) சபை' கூட்டப்பெற்றதும், உண்மையே. ஆனல் அசோகருக்கு ஏற்பட்டதுபோல் ஓர் புதிய தார்மீக நோக்கம் மனத்தில் எழுந்து, அதன் விளைவாகக் கான்ஸ்ட்ண்டைன் இக்காரியங்களைச் செய்தார் என்பதற்கோ, மதமாற்றத்தால் அவர் குணம் மாறுபட்டது என்பதற்கோ, யாதொரு ஆதாரமுமில்லை. 337-ல் இறக்கும் தருணம்வரை அவர் ஞானஸ்நாநமே (Baptism) பெறவில்லை. தவிர, கிறிஸ்துவ மதம் ரோம சாம்ராச்சியத்தில் வேரூன்றி நிற்க, புத்த மதம் இந்தியாவிலிருந்தே துரத்தப்பட்டுவிட்டது.

வேருெரு வகையில் அசோகர் ஹம்முராபி, சார்லமேன், அக்பர், முதலிய வேறு சில பேரரசர்களுடன் ஒப்பிடப் பெற்றிருக்கின்ருர். இவ்வொப்புமைகளிலும் குறைபாடுகள் உள. சுமார் கி.மு. 2100ல், டயோரைட் (diorite) என்ற ஒருவகைக்கல்லில் வெட்டப்பெற்ற ஹம்முராபியின் சட்டத் தொகுதியானது கி. பி. 1901ல் ஸூஸா என்னு

மிடத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. இப்பாபிலோனியத் தொகுதி நடைமுறையில் வழங்கும் சட்டங்களின் ஒரு தொகுதியேயாகும். அசோகரது சாசனங்களோ தருமத்தை அடிப்படையாகக் கொண்டு, நடைமுறைச் சட்டமும் நீதிபரிபாலனமும் மாறும்படி அமைந்தவை. சார்லமேன் செய்து முடித்தது ப்ராங்கி (Franks) களின் இராச்சியத்தை நிலைநிறுத்திப் பெருக்கியது, ரோமச் சக்கரவர்த்தியாக முடிசூட்டப்பெற்றது, புலவர்களை ஊக்குவித்தது, ஆகிய இவ்வளவே. அக்பரோவெனில் இந்தியாவில் மொகலாயப் பேரரசை விரித்து வேரூன்றச் செய்தது, நிர்வாக முறையையும் நீதிமுறையையும் சீர்திருத்தியது, மதவேற்றுமை பாராட்டாது சகிப்புத் தன்மையை வற்புறுத்தியது, ஆகிய இவற்றை மட்டிலே செய்தார்.

மற்றும்சிலர் அசோகரை மார்க்கஸ் ஒளரிலியஸ் (Marcus Aurelius) சக்கரவர்த்தியோடும், ப்ளேடோ கண்ட தத்துவஞானி—அரச (philosopher-king) னோடும் ஒப்பிடுகின்றனர். ஆனால் பிளேடோவே தாம்கூறும் ஞானி—அரசரால் ஆளப்பெறும் குடியரசு ஒரு ஆதரிசமேயென்றும், அதைப் போன்றதொன்று என்றும் இருந்ததில்லையென்றும், இருக்கப்போவதுமில்லையென்றும், ஐயமறக் கூறியிருக்கின்றார். அசோகரோ தம் வேதாந்தத்தைத் தருமநெறியைப்பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்வதுடன் நிறுத்தி, அதன் விளைவாகத்தம் சாசனங்களை, வெறும் கற்பனையாக இல்லாமல் உண்மையானதும், பலதரப்பட்டதும், குறைபாடுள்ளதுமான தம் சாம்ராச்சியத்திற்கு விடுத்தார். மார்கஸ் ஒளரிலியஸ்ஸின் ஸஹன வேதாந்தம் (Stoic philosophy) இராச்சிய நிர்வாகத்தில் அவர் மனத்திற்கு ஏற்பட்ட கஷ்டங்களைத்தாங்கவே பயன்படுத்தப்பெற்றது. அசோகரது தருமநெறியோ தமக்குமட்டிலின்றித்தம் உத்யோகஸ்தருக்கும் பிரஜைகட்கும் ஒழுக்க

முறையாக அமைந்தது.

பலர் அசோகரது வாழ்க்கைக்கும், காந்தியின் வாழ்க்கைக்கும் நெருங்கிய ஒற்றுமை காண்கின்றர். இந்தியச் சரித்திரத்தில் வெவ்வேறு காலப்பகுதிகளில் வாழ்ந்த போதிலும், இருவருமே இந்திய மக்களைச் சமாதான வழியிலேயே செல்லுமாறு தூண்டினர். அசோகரை 'மகாதயாள' னென்றும், காந்தியை 'மகாத்மா' வென்றும், கூறுகின்றனர். இருவருமே இராச்சியதந்திரத்தையும் அரசியலையும் ஆத்மீகமாகச் செய்வதை விரதமாகக் கொண்டவர். இருவருமே அஹிம்ஸையைக் குறிக்கோளாகக் கொண்டவர். இருவருமே நல்லெண்ணத்திலும் சினேக மனப்பான்மையிலும் ஊன்றியபண்புக்கும், தொன்று தொட்ட கலாச்சாரத்திற்கும் பிரதிநிதிகளாக விளங்குபவர். ஆனல் ஒரு வேற்றுமை: தாம் முடிக்க விருப்பியதை அடைவதற்காகக் காந்தி அரசியலைத் துறந்தார். அசோகரோ தம் பேரதிகாரத்தைச் செலுத்துவதின் வாயிலாகவே தம் குறிக்கோளை உணர்ந்து அதைத்தம் சாசனங்கள் மூலம் வெளிப்படுத்தினர்.

எவ்வளவுதான் பழங்கதைகளால் கோணியும் தகாத ஒப்புமைகளால் திரிந்தும் காணப்படினும், அசோகரது இச்சாசனங்கள் படிப்போர்க்கு நேரில் உண்மையை உணர்த்த வல்லவை. இவற்றைவிடுத்த அரசரையும், அவரால் ஆளப்பெற்ற இராச்சியத்தையும் ஓரளவு தெளிவாகவே இவை படம் பிடித்துக் காட்டுகின்றன. மேலும் இவைதீர்க்க உத்தேசிக்கும் பிரச்சினைகளும், கூறும்குறிக்கோள்களும், விடுத்த சட்ட திட்டங்களும், தம் பரந்த தன்மையால் எக்காலத்திற்கும் எத்தேசத்திற்கும் பொருந்தக் கூடியவை. இன்றைய உலகிற்கு அவைதனிப்பட்ட முக்கியத்துவமும் தொடர்பும் உடையவை. ஆயினும் சரித்திரச் சந்தர்ப்பங்களின் பின்னணியில் ஆராய்ந்தறிந்தபிறகே அவற்றின் விரிந்த நோக்கங்களைத்தெரிந்து

கொள்ள முடியும்.

பொறிக்கப்பெற்ற பாறை, தூண், குகை, ஆகிய மேற்பரப்புக்கேற்ப இச்சாசனங்களைப் பிரிக்கின்றனர். ஆனால் பல்வேருன இப்பரப்புக்கள் பல்வேறு உத்தேசங் களுக்குப் பயன்படுவன. ஆதலின், பல்வகைச்சாசனச் களின் இடங்களையும் விஷயங்களையும் ஒரு ஒழுங்கில் அமைக்கக்கூடும். வங்கக்கடலோரத்தில் புதிதாக ஜெயித்துச் சேர்த்துக் கொள்ளப்பெற்ற கலிங்கத்திலுள்ள XV, XVI ஆகிய இரு சாசனங்கள் மட்டுமின்றி, ஏனைய பதினன்கு பாறைச்சாசனங்களும் கூடச் சாம்ராச்சியத் தின் எல்லைக்கருகாமையிலேயே பொறிக்கப்பெற்றிருக் கின்றன. இப்பதினன்கும் பல்வேறு விஷயங்களை உணர்த்தும் நோக்குடன் அமைந்திருக்கின்றன. இவை பிராணி வதையைப்பற்றியும், வைத்தியம், பொது நலம், இவற்றுக்கான வசதியைப்பற்றியும், குறிப்பாக உபதேசி கும் இருசாசனங்களுடன் தொடங்கி, அடுத்தபடியாகத் தருமத்தின் தன்மையைக் கூறிப்பின்னர் சகிப்புத் தன் மைக்கும் தாராள மனப்பான்மைக்கும் தருமமே அடிப் படையாயிருப்பதை விளக்கி, ஒழுக்க நெறியிலும் மதச் சடங்குகளில் ஈடுபடும் முறையிலும் நீதிபரிபாலனத்திலும் இதன் விளைவுகளைப்போதிக்கின்றன. கடைசியில் கலிங்கப்போரின் நிகழ்ச்சியையும் அதன்விளைவையும் கூறி, இச்சாசனங்களுக்குள் நிலவும் ஒன்றுக்கொன்று சம்பந்தத்தை எடுத்துக்காட்டுகின்றதும், இந்நூலின் முதலாவதாகக் குறிப்பிடப்பெற்றிருக்கின்றதுமான சாசனத்துடன் இப்பதினன்கும் முடிவடைகின்றன. மேற்கூறிய இரண்டு (XV, XVI) கலிங்கச் சாசனங்களும், வேறு மூன்று (அதாவது உதாரகுணத்தையும் எல்லோ ரும் ஓர் குலம் என்ற மனப்பான்மையையும் வற்புறுத்தும் XI, மதவிஷயத்தில் சகிப்புத்தனமையை வலியுறுத்தும் XII, கலிங்கப்போரையும் அதனல் ஏற்பட்ட மனமாற்றத்தை

யும் கூறும் XIII) சாசனங்களின் விஷயத்தையே திரும்பக் கூறுகின்றன. ஜெயிக்கப் பெற்ற கலிங்க தேசத்தை நிர்வாகம் செய்யும் உத்தியோகஸ்தர்களுக்கு விடுக்கப் பட்ட இவ்விரு சாசனங்களும் ஒழுக்கமுறை, நீதிபரி பாலனம், அண்டைநாடுகளுக்குள் பரஸ்பர பயத்தைக் குறைத்து நாடுகள் யாவும் சண்டையின்றி வாழவழி செய்தல், ஆகிய பிரச்சினைகளைப்பற்றியவை.

தூண் சாசனங்களோ சாம்ராச்சியத்தின் உட்புறத்தில் முக்கியப் பட்டணங்களிலும் பாட்டைகளிலும் நிறுவப் பெற்றவை. இவற்றில் மூன்று அசோகரது தலைநகராகிய பாடலீபுத்திரத்திலிருந்து இமயத்தின் அடிவாரத்திலுள்ள பௌத்தப் புண்ணிய ஸ்தலங்களுக்குச் செல்லும்பாதை யில் காணப்பெறுகின்றன. இச்சாசனங்களில் கூறப் பெறும் விஷயங்கள் மேலே கூறிய பாறைச்சாசனங்களில் உள்ளவைகளைப்போல் அவ்வளவு பல தரப்பட்டவை யல்ல. இவை தருமத்தின் தன்மையைக்கூறும் இரு சாசனங்களிலிருந்து தொடங்கி, மத்தியில் முறையே பாபச்செயல்களையும் மனவெழுச்சிகளையும் அடக்குவது, ஒழுக்கத்தையும் நியாயத்தையும் போதிப்பது, விருந்து களையும் பிராணிவதையையும் கட்டுப்படுத்துவது, ஆகிய இவற்றை வற்புறுத்தும் தருமநெறியை உபதேசிக்கும் மூன்று சாசனங்களைக்கொண்டு, கடைசியில் ஒழுக்கத் தைப் போதிக்க உதவும் வழிகளைப்பற்றிய ஒரு சாசனத் துடன் (தோப்ராத்துணில் மட்டில் இம்முடிவு இரண்டு சாசனங்களாக வருகின்றது) முடிவடைகின்றன.

பாறைச்சாசனங்களின் ஒருபகுதி அவற்றின் தன்மைக் கேற்பச் சிறுபாறைச் சாசனம் எனப்படுவன. இவை பெரும்பாலும் சாம்ராச்சியத்தின் மத்தியிலும் தெற்கிலும் மிகுந்திருக்கின்றன. பௌத்த சிராவகர் என்ற முறை யில் அசோகரது செயல்களையும், நடைமுறையில் பின் பற்றத்தக்க நல்லொழுக்க முறைகளையும், கடைசியாகப்

பௌத்த பிக்ஷுக்களுக்கென்றே விடுக்கப்பெற்ற ஒரே சாசனமாகிய சிறுபாறைச்சாசனம் III ல் தருமத்தைப் போதிக்கும் சில பௌத்த நூல்களையும், இவை கூறுகின்றன.

மொத்தம் உள்ள சிறு தூண் சாசனங்கள் மூன்றில் இரண்டும், நேப்பாளத்தில் மட்டில் காணப்பெறும் இரு தூண் கல்வெட்டுக்களும், புத்தமதத்தைப்பற்றியவை. பராபர் குன்றுகளில் குகைக்கல்வெட்டுக்கள் உள்ளன. இவை புத்த பிக்ஷுக்களுக்கு மழைக்காலத்தில் இக்குகைகளைத் தங்குமிடமாகச் சமர்ப்பணம் செய்து கொடுக்கும் சுருக்கமான வாசகத்தைக் கொண்டவை.

மேற்கூறிய பதினன்கு பாறைச் சானங்களும் வெவ்வேருன ஆறு பிராந்தியங்களில் பொறிக்க பெற்றிருக்கின்றன. இப்பதினன்கில் பதினென்றும், மற்றும் தற்சமயம் இருக்குமிடம் தெரியாத மூன்றின் (இன்மூன்றும் மேலே சாசனங்கள் XI, XII, XIII என்று கூறப்பெற்றவை) விஷயத்தையே கூறும் இரண்டு சாசனங்களும், (இவ்விரண்டும் சிலசமயம் கலிங்க சாசனம் என்றும், சில சமயம் சாசனம் XV, XVI என்றும் கூறப்பெறுபவை) இரண்டு பிராந்தியங்களில் காணப்படுகின்றன. அவற்றில் இரண்டு மகாராஷ்டிர மாநிலத்தில், பம்பாய்ப் பகுதியில் ஸோபாரா (Sopara) என்னுமிடத்திலும், ஸௌராஷ்டிரப் பகுதியில் கிர்நார் (Girnar) என்னுமிடத்திலும், இருக்கின்றன. இரண்டு வடமேற்கு எல்லைக் கருகாமையில் மேற்குப் பாகிஸ்தானில் மன்ஸெஹரா (Mansehra) ஷாஹ்பஜ்கர்ஹி (Shahbazgarhi) என்ற விடங்களில் இருக்கின்றன. ஒன்று வடக்கில் உத்தரப் பிரதேசத்திலுள்ள காலஸ் என்னுமிடத்திலிருக்கிறது. மற்ருென்று தெற்கில் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள எர்ரகுடி (Erragudi) என்றவிடத்திலிருக்கிறது. மேற்கூறிய பதினொரு பாறைச் சாசனங்களும் இரு கலிங்கசாசனங்களும் கிழக்கு எல்லைக்

கருகில் வங்காள குடாக் கரையில் ஒரிஸ்ஸா மாநிலத்தில் தௌலி (Dhauli) ஜௌகடா (Jaugada) என்ற இருவிடங்களில் இருக்கின்றன. ஆக இப்பதினறு பாறைச்சாசனங்களைத் தவிர, சிறு பாறைச்சாசனம் I என்று கூறப்பெற்ற வேரென்று ராஜஸ்தானிலுள்ள பைராட் (Bairat) டிலும் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள கவிமத் (Gavimath) மாஸ்கீ (Māski) பால்கீகுண்டு (Pālkigundu) என்னுமிடங்களிலும், விந்தியப் பிரதேசத்திலுள்ள குஜர்ரா (Gujarrā) விலும், மத்தியப் பிரதேசத்திலுள்ள ரூப்நாத் (Rūpnāth) திலும், பீகாரிலுள்ள ஸஹஸ்ரா (Sahasrām) மிலும், இப்படி வட இந்தியாவிலும் ஆந்திரத்திலுமாகச் சேர்ந்து ஏழு இடங்களில் காணப்பெறுகின்றன. இச்சிறுபாறைச்சாசனமும், சிறு பாறைச்சாசனம் II என்ற மற்றென்றும் சேர்ந்து, மைசூர் பிரதேசத்தில் பிரம்மகிரி, ஜடிங்கராமேச்வரம் (Jatinga-Ramesvara) ஸித்தாபுரம் (Siddhapura) என்றவிடங்களிலும் ஆந்திரத்தில் எர்ரகுடி, ராஜுல-மந்தகிரி (Rajula-Mandagiri) என்ற விடங்களிலும், ஆகத்தெற்கில் ஐந்திடங்களிற் காணப்படுகின்றன. பைராட்டில் சிறு பாறைச் சாசனம் I உடன் சிறுபாறைச்சாசனம் III என்ற மற்றென்றும் கிடைத்திருக்கின்றது. போதிய அளவும், பார்வையும், இருக்கும்படியாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற சாதாரணக் கற்பாறைகளில் இச்சானங்களெல்லாம் பொறிக்கப் பெற்றிருக்கின்றன. இவை பல தரமாகச் சிதைவுற்ற நிலையில் இப்போது இருக்கின்றன. கற்பரப்புக்கள் பெயர்ந்துபோனதாலும், வெயில், மழை, காற்று முதலியவற்றுக்கு இலக்கானதாலும், மனித உராய்வினல் ஏற்பட்ட பலவகையான தேய்வினலும், கல் வெட்டுக்கள் சில அதிகமாகவும் சில குறைவாகவும், பழுதுபட்டிருக்கின்றன. இவ்விதமாக ஸோபாராவிலுள்ள கல்வெட்டுக்களுள் பாறைச்சாசனம் VIII, IX இவற்றின் சில பகுதிகளே எஞ்சியிருக்கின்றன. கூடிய வரை கெடா

மலிருக்கின்றதா என்பதைக் கவனித்து, இம்மொழி பெயர்ப்புக்கு உபயோகிக்கப்பெற்ற மூலவாசகங்கள் சில சமயம் ஓரிடத்திலுள்ள கல் வெட்டிலிருந்தும் சில சமயம் வேற்றிடத்திலுள்ளதிலிருந்தும் எடுத்துக் கொள்ளப் பெற்றிருக்கின்றன. முழுதும் கெட்டுப்போன பகுதிகளும் கூடச் சில சமயம் வேறு இடங்களில் கிடைக்கும் வாசகங் களைக் கொண்டு நிரப்பக்கூடியனவாய் இருக்கின்றன.

தூண் சாசனங்கள் ஆறு சாசனங்களின் தொகுதியா கும். ஒவ்வொன்றும் ஒரே கல்லாலாகிய ஐந்து தூண் களில் இவை வெட்டப்பெற்றிருக்கின்றன. இத்தூண்கள் உத்தரப் பிரதேசத்திலுள்ள மீரட்டில் ஒன்றும் (இதுதான் பதினன்காம் நூற்றுண்டில் டில்லிக்கு எடுத்துச் செல்லப் பெற்றது) கௌசாம்பியில் ஒன்றும் (இது அலகாபாத் துக்கு எடுத்துச்செல்லப்பட்டது, காலம் தெரியவில்லை) பீகாரிலுள்ளவைகளான லௌரியா-அரராஜ் (Lauriya-Ararāj) ஜில் ஒன்றும், லௌரியா-நந்தன்கர் (Lauriya-Nandangarh) இல் ஒன்றும், ராம்பூர்வா (Rāmpūrvā) வில் ஒன்றும், ஆக ஐந்திடங்களில் நடப்பெற்றவை. இவ் வைந்து தூண்களிலுள்ள ஆறு சாசனங்களுடன் ஏழாவ தொரு சாசனத்தையும் சேர்த்துப் பொறிக்கப்பெற்ற ஒரு ஆருவது தூண் கிழக்குப் பஞ்சாபில் தோப்ரா என்னு மிடத்தில் நாட்டப்பெற்றிருந்ததாகத் தெரிகிறது. இதுவும் பதினன்காம் நூற்றுண்டில் டில்லிக்குப் பெயர்த்துச் செல்லப்பட்டது. மேற்கூறிய ஆறு சாசனங்களின் வாச கங்களும் அநேகமாக ஒரே மாதிரி இருக்கின்றன. ஆனல் பலவிடங்களில் கல்வெட்டு முடிவு பெருமலும், வாசிக்க முடியாமலும், இருக்கின்றது. முன்பு கௌஸாம்பி (தற் கால கோஸாம்)யில் நாட்டப் பெற்றிருந்ததான அலகா பாத்துத் தூணில் இரண்டு அதிகப்படியான சாசனங்களி ருக்கின்றன. இவற்றுள் ஒன்று சிறுதூண் சாசனம் I என்றும் சிலசமயம் கூறப்பெறும். இது மத்தியப்பிரதேசத்

திலுள்ள ஸாஞ்சியிலும், உத்தரப் பிரதேசத்திலுள்ள ஸார்நாத்திலும் காணப்படுகின்றது. இம்மூன்றிடங்களிலுமே இது மிகவும் பழுது பட்டிருப்பதுடன் வாசகத்திலும் ஒன்றுக்கொன்று அதிகமாக வேறுபட்டிருக்கின்றது. ஸார் நாத் தூணில் வேறொரு சாசனமும் பொறிக்கப் பெற்றிருக்கிறது. இதை இம்முதல் சாசனத்தின் தொடற்சியென்றும் கூறலாம். சில்சமயம் இதைச் சிறுதூண்சாசனம் II என்றும் கூறுவதுண்டு. சிறுதூண்சாசனம் III என்று சிலசமயம் குறிக்கப்படும் அலகாபாத்துத் தூணிலுள்ள மற்ருெரு அதிகப்படியான சாசனமானது அசோகரது இராணிகளில் ஒருவரது கொடையின் ஞாபகார்த்தமாக அமைந்தது. ஆகையால் இது பெரும்பாலும் இராணியின் சாசனமென்றே வழங்குகின்றது. கடைசியாக, நேப்பாளத்தில் இருதூண் கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றன. அவற்றில் ஒன்று புத்தபிரான் பிறந்த விடமாகிய ரும்மின்தெய் (Rummindei) யில் உள்ளது. மற்ருென்று நிகாலிஸாகர் (Nigali Sagar) என்ற பெரியகுள (குட்டை)த் தினருகாமையில் பூர்வபுத்தர்களுள் ஒருவராகிய கனகமுனியின் அஸ்தி முதலியவை அடக்கம் செய்யப்பட்டவிடத்தில் உள்ளது. எழுத்துக்கள் பொறிக்கப்பெருத பலவெற்றுத் தூண்களையும் அசோகர் நாட்டியிருக்கின்ருர். ஆனல் அவற்றுளும் சாசனத் தூண்களைப் போலச்சிலவே இன்றும் இருக்கின்றன. பல தூண்களிலுள்ள கல்வெட்டுக்களை வாசிப்பது கடினமாயிருப்பினும், தூண்களைப் பற்றிய வரை, அவை பார்வைக்குக் கவர்ச்சிகரமாய் அமைந்திருக்கின்றன. அவற்றின் நீண்டதண்டுகள் மௌரியர் காலத்துக்குச் சிறப்பானதும், இன்று செய்முறை அற்றுப்போனதுமான அமைப்பில் நன்ருக மெருகூட்டப்பெற்று விளங்குகின்றன. அவை ஒவ்வொன்றும் பெரும்பாலும் நாற்பதிலிருந்து ஐம்பதடி உயரமுள்ள ஒரேகல்லால் ஆனவை. பல தூண்களின்

மேல், சிங்க உருவிலோ (உதா.லௌரியா – நந்தன்கர்) மேலே சிங்கத்துடன் கூடிய மணி உருவிலோ, இப்போது இந்தியாவின் சின்னமாக உபயோகிக்கப்படும் நாற்சிங்க உருவிலோ (உதா. ஸாஞ்சி, ஸார்நாத்) வெறும் மணி உருவிலோ (ரும்மிந்தெய்) வேலைப்பாடுடைய சிகரங்கள் இன்றும் காணப்படுகின்றன. எழுத்துப்பொறிக்கப்பெருத சில வெற்றுத்தூண்களுக்கு யானையோ, காளையோ, சிகரமாக அமைந்துள்ளது.

பீகாரில் பராபர் (Barābar) குன்றுகளிலுள்ள கருங் கல்லில் குடையப்பட்ட நான்கு குகைகளுள் மூன்றில் குகைச் சாசனங்கள் காணப்படுகின்றன. நான்காவது குகையில் கி.பி. ஐந்தாம் நூற்ருண்டில் பொறிக்கப்பெற்ற ஓர் கல்வெட்டு இருக்கின்றது. மேல் மூன்று அசோகக் கல்வெட்டுக்களில் இரண்டு புத்தர் சமகாலத்தவரான கோசாலர் என்ற மதத் தலைவரால் ஸ்தாபிக்கப்பெற்ற ஆஜீவிகர் என்ற மதப்பிரிவைச் சேர்ந்த பிக்ஷுக்களுக் கென்று குகைகளைச் சமர்ப்பணம் செய்பவை. பராபர் குன்றுகளின் மற்ருெருபகுதியான நாகார்ஜுனி (Nagarjuni) க்குன்றிலுள்ள மூன்று குகைகளிலும் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களும், 'தேவர்க்குப் பிரியன்' என்று தம்மைக்கூறிக் கொள்ளும் ஓர் அரசனின் பெயரால் இக்குகைகளை அதே ஆஜீவிகபிக்ஷுக்களுக்குச் சமர்ப்பணம் செய்கின்றன. ஆனுல் இச்சமர்ப்பணங்கள் அசோகரதுபேரனை தசரதர் என்பவரால் செய்யப்பட்ட வையாகும்.

இப்பதிப்பில் இராணிசாசனத்தையும் சிறுசாசனங் களின் சில பாட பேதங்களையும் தவிர மற்றெல்லாச் சாசனங்களும் வெளியிடப்பெற்றிருக்கின்றன. இவற்றைப் படிப்போருக்குப் பொருளை நன்கு உணர்த்தவேண்டி, வரிசையாக ஆறுதலைப்புக்களின் கீழ் இச்சாசனங்கள் தொகுக்கப்பெற்றிருக்கின்றன. முதலில் வரும் பகுதிகள்

அசோகர் இச்சாசனங்களைப்பற்றிக் கூறுபவை. அடுத்த படியாக இவை ஏற்பட்டதன் காரணம், இவற்றின் உத்தேசம், இவ் வுத்தேசத்தை நிறைவேற்றுவதற்காக அவர் உபயோகித்த வழிகள், இவற்றைப் பற்றிக் கூறுபவை. கடைசியாகத் தாம் பொருள்கொண்டபடி தருமத்தின் தன்மையையும், அதை உபயோகிக்க வேண்டிய இடங்களையும், அவர் குறிப்பாகக் கூறுபவை. மேன்மேலும் பொருள் விரிகின்றவாறு அமைக்கப்பெற்ற இத்தகைய வரிசைக்குள் பொருந்தும் வண்ணம், நான்கு சாசனங்கள் மட்டில் வெவ்வேறு பகுதிகளாகப் பிரிக்கப் பெற்றிருக்கின்றன. இது ஒன்றைத்தவிர மற்றபடி சாசனங்களெல்லாம் தனித்தனியே வைத்தே மொழி பெயர்க்கப் பெற்றிருக்கின்றன. இந்தத் தொகுப்பு முறை யானது முதலெடுப்பில் இச்சானங்களின் தன்மையைப் புரிந்துகொள்ள உதவினுல் இப்படிச்செய்ததின் உத் தேசம் நிறைவேறிவிட்டது எனலாம். இதற்குமேல், இச் சானங்கள் முதலில் எவ்வுருவில் வெளிவந்தன, கற்பாறை களிலும் தூண்களிலும் இவை அடுத்தடுத்து எந்த வரிசையில் வருகின்றன, என்பனவற்றைப் பற்றித் தெளிவான அறிவு நம் மனத்தில் ஏற்படுவதற்கு இத் தொகுப்பு முறை தடையாக இருத்தல் கூடாது. கீழ்வரும் அட்டவணையானது கல்வெட்டுக்களின் வரிசையை இம் மொழி பெயர்ப்பில் வரும் சாசனங்களின் வரிசையுடன் ஒப்பிட்டுப் பார்க்க வாசகர்க்கு உதவும்.

| பாறைச்சாசனங்கள் | | இப்பதிப்பில் அவற்றின் இடம் |
|---|---|---|
| I | VI-B. 1. | விருந்துகளையும் பிராணிவதையை யும் குறைப்பதில் தரும நெறியின் பிரயோகங்கள். |
| II | VI-B. 3. | மருத்துவ உதவிக்கும் பொதுநலத் திற்கும் வகை செய்வதில் தரும நெறியின் பிரயோகங்கள். |

| | | |
|---|---|---|
| III | VI-B. 2. | ஒழுக்க முறையைப் பரப்புவதிலும், நீதி வழங்குவதிலும், தரும நெறியின் பிரயோகங்கள். |
| IV | III | தருமத்தைப் புகட்டுவதின் நோக்கங்கள். |
| V | IV-2 | தருமப் பிரசாரத்தில் அசோகரது பங்கு. |
| | VI-B. 2. | ஒழுக்க முறையைப் பரப்புவதிலும், நீதி வழங்குவதிலும் தரும நெறியின் பிரயோகங்கள். |
| VI | IV-2. | தருமப் பிரசாரத்தில் அசோகரது பங்கு. |
| VII | VI-A. 3. | மதச் சகிப்பின்மையை எதிர்த்து நிற்பதில் தரும நெறியின் பிரயோகங்கள். |
| VIII | IV-2. | தருமப் பிரசாரத்தில் அசோகரது பங்கு. |
| IX | V-5. | மதச் சடங்கு, கிரியை, என்ற உருவில் தருமத்தின் தன்மை. |
| X | IV-2. | தருமப் பிரசாரத்தில் அசோகரது [பங்கு. |
| | IV-A. 1. | கெட்ட செயல்களையும் மனவெழுச்சிகளையும் அடக்குவதில் தரும நெறியின் பிரயோகங்கள். |
| XI | V-4. | உதாரகுணம் எல்லோரும் ஓர் குலம் என்ற உருவில் தருமத்தின் தன்மை. |
| XII | VI-A. 3. | மதச் சகிப்பின்மையை எதிர்த்து நிற்பதில் தரும நெறியின் பிரயோகங்கள். |
| XIII | II | சாசனங்கள் ஏற்பட்டதன் காரணமும் அவற்றின் உத்தேசமும்: கலிங்கப்போர், அசோகரது மனமாற்றம், தருமஜெயக் குறிக்கோள். |
| XIV | I | சாசனங்கள்: சந்தர்ப்பங்களுக் கேற்ப அவற்றை மாற்றலும் திரும்பக் கூறலும்: |

| | | |
|---|---|---|
| XV (அல்லது கலிங்க சாசனம் I) | VI-B. 2. | ஒழுக்கமுறையைப் பரப்புவதிலும், நீதி வழங்குவதிலும் தரும நெறியின் பிரயோகங்கள். |
| XVI (அல்லது கலிங்க சாசனம் II) | VI-A. 4. | நாடுகளுக்குள் போர் மனப்பான்மையை மாற்றுவதில் தரும நெறியின் பிரயோகங்கள். |
| **சிறுபாறைச் சாசனங்கள்** | | **இப்பதிப்பில் அவற்றின் இடம்** |
| I (மஸ்கீ சாசனம் விஷயங்கள் | VI-A. 2. | மதப்பற்றின்மை நீங்கத் தரும நெறியின் பிரயோகங்கள். |
| பிரம்ம கிரி சாசனம் I போல்) | VI-B. 4. | புத்தமதத்திற்குத் தரும நெறியின் பிரயோகங்கள். |
| II (பிரம்மகிரி சாசனம் II) | V-3. | மரியாதை, சத்தியம், என்ற உருவில் தருமத்தின் தன்மை. |
| III (பாப்ரா அல்லது பைராட்சாசனம்) | VI-B. 4. | புத்த மதத்திற்குத் தரும நெறியின் பிரயோகங்கள். |
| **தூண் சாசனங்கள்** | | **இப்பதிப்பில் அவற்றின் இடம்** |
| I | V-2. | ஆத்தும சோதனை, சேவை, என்ற உருவில் தருமத்தின் தன்மை. |
| II | V-2. | ஆத்தும சோதனை, சேவை, என்ற உருவில் தருமத்தின் தன்மை. |
| III | VI-A. 1. | கெட்ட செயல்களையும் மனவெழுச்சிகளையும் அடக்குவதில் தரும நெறியின் பிரயோகங்கள். |
| IV | VI-B. 2. | ஒழுக்கமுறையைப் பரப்புவதிலும், நீதி வழங்குவதிலும், தரும நெறியின் பிரயோகங்கள். |
| V | VI-B. 1. | விருந்துகளையும் பிராணிவதையையும் குறைப்பதில் தரும நெறியின் பிரயோகங்கள். |
| VI | IV 1. | தருமப் பிரசாரத்தைப்பற்றிய அசோகரது அபிப்பிராயங்கள். |
| VII | IV 1. | தருமப் பிராசாரத்தைப்பற்றிய அசோகரது அபிப்பராயங்கள். |
| | VI | சிந்தனை, அஹிம்ஸை, என்ற உருவில் தரும நெறி. |

| | | |
|---|---|---|
| | VI-B. 3. | மருத்துவ உதவிக்கும் பொதுநலத்திற்கும் வகை செய்வதில் தரும நெறியின் பிரயோகங்கள். |
| **சிறுதூண் சாசனங்கள்** | | **இப்பதிப்பில் அவற்றின் இடம்** |
| I (ஸாஞ்சீ சாசனம்) | VI-B. 4. | புத்த மதத்திற்குத் தரும நெறியின் பிரயோகங்கள். |
| II (ஸார்நாத் சாசனம்) | VI-B. 4. | புத்த மதத்திற்குத் தரும நெறியின் பிரயோகங்கள். |
| III (இராணியின் சாசனம்) | | (விடப்பட்டது) |
| **தூண் கல்வெட்டுக்கள்** | | **இப்பதிப்பில் அவற்றின் இடம்** |
| I ரும்மிந்தெய்த் தூண் | VI-B. 4. | புத்த மதத்திற்குத் தரும நெறியின் பிரயோகங்கள். |
| II நிகாலிஸாகர் தூண் | | (விடப்பட்டது) |
| **குகைக் கல்வெட்டுக்கள்** | | **இப்பதிப்பில் அவற்றின் இடம்** |
| (கர்ன சௌபார் குகை) | VI-B. 4. | ஆஜீவிக மதப் பிரிவிற்குத் தரும நெறியின் பிரயோகங்கள். |

கல்வெட்டுக்கள் பண்டிதர் பாஷையாகிய ஸம்ஸ்கிருதத்தில் இல்லாமல் மகதத்தில் வழங்கிய பாமரர் பாஷையான பிராகிருதத்தில் எழுதப்பெற்றிருக்கின்றன. நடை எளிதாகவும் சிலசயம் முரடாகவும் கூட இருக்கின்றது. இதிலிருந்து சிலர் கல்வெட்டுக்களிலுள்ள சொற்கள் அசோகர் அன்றுடம் உபயோகித்த சொற்களாகவேயிருக்கலாம் என்றும், அவை அநேகமாக நிர்வாகத்திற்கு உபயோகிக்கப்படும் உத்தியோக மொழியிலிருந்து வேறுபட்டனவாயிருக்கக்கூடுமென்றும், பெரும்பாலும் அவை அசோக சாம்ராச்சியத்திலுள்ள பொதுமக்களுக்குப் புரியக்கூடியனவாகவே இருக்குமென்றும், பலவாறு வாதிக்கின்றனர் பிராகிருதம் என்பது இன்று இந்தியாவில் வழங்கும் இந்து-ஐரோப்பிய (Indo-European) மூல மொழி வழிவந்த

மொழிகளையும், ஸம்ஸ்கிருதத்தையும் இணைக்கும் ஒரு மொழியாகும். அசோகர் காலத்தில் இது விரிவாகப் பேச்சு வழக்கில் இருந்தது. பாக்டிரியா (Bactria) தேசத்துக் கிரேக்க அரசர்களது இருமொழி நாணயங்களில் இது காணப்படுகின்றது, சாம்ராச்சியத்தின் வடமேற்குக் கோடியில் கரோஷ்டீ (Kharoshthi) யும் மற்றவிடங்களில் பிராம்மீ (Brahmi) யுமாக, இருலிபிகள் அல்லது நெடுங் கணக்குகள் கல்வெட்டுக்களுக்கு உபயோகிக்கப்படுகின் றன. இற்றைக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரேயே கரோஷ்டீ நெடுங்கணக்கு வழக்கற்றுப்போயிற்று. பிராம் மீலிபியோ தற்காலம் இந்தியாவில் வழங்கும் ஸம்ஸ்கிருத வழிவந்த மொழிகள், திராவிட மொழிகள், இவற்றின் லிபிகளுக்கும், தென்கிழக்கு ஆசியாவில் வழங்கும் லிபி களுக்கும், மூலமாகும். இச்சாசனங்களிற்பல பொதுமக் களுக்கென்று விடுக்கப்பெற்றிருப்பதால், அசோகரது பிர ஜைகள் மிகுந்த கல்வியறிவு படைத்தவர் என்பதற்கு இவை சான்று என்று கூறுவாருண்டு. ஜனங்களுள் தாங்களே இவற்றைப் படித்தறியக்கூடியவரது விகிதம் யாதாயிருப்பினும், அசோகர் இச் சாசனங்களுக்காகத் தேர்ந்தெடுத்த மொழியானது அவர் கண்ட ஒழுக்க நெறியின் பரந்த தன்மைக்கு ஓர் அடையாளமாகும். இன்னெறி தத்துவ விசாரம்செய்யும் வேதாந்திகளோ, மதச்சாத்திரங்களில் விற்பன்னரான பெரியோரோ, தியானத்தில் ஈடுபடும் யோகியரோ, பின்பற்றவேண்டிய மனத்திற்கெட்டாக் குறிக்கோள் அல்ல. இது மானிடர் யாவரும் அடையவேண்டிய ஒரு மனப்பான்மையும், பின்பற்ற வேண்டிய ஒரு வாழ்க்கை முறையுமாகும்.

அசோகர் முடிசூட்டிக்கொண்டது, பௌத்தச்சிராவக ராக ஆகியது, முதலிய பல நிகழ்ச்சிகளையும் கூறிவிட்டுப் பல சாசனங்கள் அவை விளம்பரமான காலங்களைக் குறிக்கின்றன. ஆகையால் இதன்பின் இது, இதன்பின்

இது, என்று சாசனங்கள் விளம்பரமான காலங்களை ஒரு திட்டமான வரிசையில் எளிதில் அமைக்கலாம்' (ஆனுல் அசோகர் தகுந்த பாறைகளோ தூண்களோ கிடைக்குமிடமெல்லாம் தம் சாசனங்களை நகல்செய்து பொறிக்குமாறு கட்டளை பிறப்பித்திருந்ததால், இக்கால வரிசையானது குறிப்பிட்ட கல் வெட்டுக்களின் கால வரிசையைக் குறிக்காது என்பது தெளிவு.) இவ்வரிசையைக்கொண்டு அவரது ஆட்சிக்கால நிகழ்ச்சிகளுக்கு உத்தேசமாக ஒரு கால அட்டவணையைத் தயாரிக்கலாம். அவர் இரண்டரை ஆண்டுகளாகச்சிராவகர் என்ற முறையில் தம் கடமைகளைச் செய்வதில் தீவிரமாக ஈடுபட்டிருந்ததாக முதலாவது சிறுசாசனம் கூறுகிறது. பதின்மூன்ருவது பாறைச்சாஸனத்திலிருந்து அவர் முடிசூடி எட்டு ஆண்டுகள் கழிந்து கலிங்கப்போர் நிகழ்ந்ததாக அறிகிரேம். எட்டாம்பாறைச்சாசனம் அவர் முடிசூடிப்பத்து ஆண்டுகள் சென்றதும் ஸம்போதி (Sambodhi)க்கு யாத்திரை போனதாகவும், அதுவே அவரது தரும யாத்திரைகளுள் முதலாவதென்றும், கூறுகிறது. மூன்ருவது, நான்காவது, பாறைச் சாசனங்கள் முடிசூடிப் பன்னிரண்டாண்டு முடிந்து வெளிவந்தவை. முடிசூட்டிக்கொண்டபின் பதின்மூன்று ஆண்டுகள் கழிந்து அசோகர் தருமபரிபாலனத்திற்கென்றே தருமமகாமாத்திரர் என்ற உத்தியோகத்தைப் புதிதாக ஏற்படுத்தியாக ஐந்தாம்பாறைச்சாசனம் குறிக்கின்றது. ஆகையால் இக்கல் வெட்டு அசோகர் முடிசூடியபின் பதின்மூன்று ஆண்டுகளுக்குள் ஏற்பட்டிருக்க முடியாது. குகைக்கல்வெட்டுக்களில் முதல் இரண்டும் முடிசூடிப்பன்னிரண்டாண்டு கழிந்தும், மூன்ருவது பத்தொன்பதாண்டு கழிந்தும், ஏற்பட்டனவென்று அவற்றிலிருந்து அறிகிரேம். முதலாம், நான்காம், ஐந்தாம், ஆரும், தூண் சாசனங்கள் முடிசூடி இருபத்தாருண்டுகள் சென்றும், ஏழாம் தூண்

சாசனம், இருபத்தேழாண்டு சென்றும், விளம்பரம் செய்யப்பெற்றன. புராணவரலாற்றின்படிக்கும், பாலிக் கிரந்தங்களின்படிக்கும் அசோகரது ஆட்சிக்காலம் முப் பத்தாறு அல்லது முப்பத்தேழு வருஷங்களாகும். அவர் பிறந்தது சுமார் கி. மு. 304ல் என்று கூறுகின்றனர். அவர் அரியணையேறியது அநேகமாகக் கி. மு. 274 க்குப் பின் இராது எனலாம். முடிசூட்டிக்கொண்டது கி. மு. 270க்குப்பின் இராது. ஆகையால் சுமார் கி. மு. 262ல் கலிங்கப்போர் நடந்திருக்கவேண்டும். அவர் அநேகமாக இதற்கு முன்பே புத்தமதத்தைத் தழுவியிருக்கலாம். அம் மதத்தில் அவருக்குப் பக்திமிகுந்த காலம் அநேகமாக இப்போரை அடுத்து, எனக்கூடும். தருமயாத்திரைகள் சுமார் கி. மு. 260 லிருந்து தொடங்கின. அதே ஆண்டில் முதலாம், இரண்டாம் (மூன்ருவதும் இருக்கலாம்) சிறு பாறைச்சாசனங்கள் வெளியாயின. சாசனங்களுள் இவையே முதலில் ஏற்பட்டவை. கலிங்க சாசனங்கள் (அதாவது பதினைந்தாம், பதினாறாம், பாறைச் சாச னங்கள்) கி. மு. 259-ல் வெளியாகியிருக்கலாம். ஆனல் பதினன்கு பாறைச்சாசனங்களும், பராபர் குன்றுகளி லுள்ள இருகுகைகளின் சமர்ப்பணமும் சுமார் கி. மு. 258-57ல் தான் ஏற்பட்டிருக்கக்கூடும். கி. மு. 257ல் தருமபரிபாலனத்திற்கான அலுவலர்கள் முதன் முதலில் நியமிக்கப்பெற்ருர்கள். நேப்பாளத்திலுள்ள ஞாபகச் சின்னங்களான இரு தூண்களும் சுமார் கி. மு. 250ல் நாட்டபெற்றவை. பின்னர் கி. மு. 243-42ல் தூண் சாசனங்கள் ஏற்பட்டன. அசோகரது ஆட்சிக்காலம் முப்பத்தாறு ஆண்டுகள் அல்லது முப்பத்தேழு ஆண்டு கள் என்பது அவர் அரியணையேறியதிலிருந்தா, அல்லது முடிசூட்டிக்கொண்டதிலிருந்தா, என்பதைப் பொருத்து அவர் இறந்துபோன காலம் கி. மு. 237-36 என்றும் கி. மு. 232 என்றும் இருவிதமாகக் கூறுவர்.

அண்டைநாட்ட வரைத்தம் ஆட்சிக்கு உட்படுத்த உதவியதும், குறுகிய காலத்திற்குள் முடிந்துவிட்டதுமான கலிங்கப்போர் ஒன்றுதான் அசோகர் நிகழ்த்தியது. அவர் வாழ்க்கை நிகழ்ச்சிகள் யாவும் இந்த ஒரு முக்கிய சம்பவத்தையே மையமாகக் கொண்டவை. இப்போரின் கொடுமையின் விளைவாகத் தம் மனத்தில் உதித்த ஆழ்ந்த பச்சாத்தாபத்தையும் மனமாற்றத்தையும் அவர் குறித்திருக்கின்றார். அவரது தனிப்பட்ட வாழ்க்கையிலும், அரண்மனை நிர்வாகத்திலும், இராச்சிய நிர்வாகச்சீரமைப்பிலும், இம்மனமாற்றம் வெளிப்பட்டதென்று சாசனச்சான்றுகளிலிருந்து தெரிகின்றது. இதன் விளைவாகவும் தோற்றமாகவும் எழுந்த இச்சாஸனங்கள் தருமம், ஒழுக்க நெறி, என்ற இவ்விருகருத்துக்களுடன் இதைப்பலவாறாக இணைக்கின்றது—ஒருபுறம் தருமமானது தனிப்பட்ட மனிதனின் ஒழுக்க முறைகளை வகுத்து, மனிதர் சேர்ந்து வாழ்வதற்கான ஒரு இணைப்பை அமைத்து, அரசியல் நீதியைப் போதிக்கின்றது; தேசங்களும் தனிமனிதனைப் போலவே ஒன்றோடொன்று ஒத்து வாழ்வதற்காகப் பின்பற்றவேண்டிய அடிப்படையையும் உணர்த்துகின்றது. மறுபுறம், மனிதரது வாழ்க்கையைத் தீச்செயல்களிலிருந்தும், ஒருவரோடொருவர் சகிப்புத்தன்மையின்றி நடந்துக்கொள்வதிலிருந்தும், திருப்பிப் போர்கள் நிகழ்வதை தடுக்கின்றது.

அசோகர் தொடங்கிய புதிய வாழ்க்கையில் மதம், ஒழுக்கம், இராசரீகம், இவை எல்லாவற்றின் உத்தேசங்களும் குறிக்கோள்களும் பிரிக்க முடியாமற் பின்னிக்கிடக்கின்றன. ஒழுக்க நெறியின் அடிப்படைகளைத் தகுந்தவாறு பொருத்தி, மதானுஷ்டானமும் அரசியல் நிர்வாகமும் மாற்றியமைக்கப்பெறுகின்றன. நல்லொழுக்கத்தின் தத்துவம் உருவம் கொடுக்கப்பெற்று, அன்றாடக்காரியங்களோடும் உணர்ச்சிகளோடும் பொருத்தப்பெறுகின்றது.

அசோகர் புத்தமதத்திற்கு மாறினதோ, அல்லது சிராவகர் என்ற தன்மையில் புத்தமதத்தில் அவரது ஆர்வம் விருத்தியானது மட்டிலோ, ஏறத்தாழக் கலிங்கப்போர் நிகழ்ச்சிகளின் காலத்திலேதான். அவரது பிரசாரக் குறிக்கோள் தருமத்தின் தன்மையை ஆராய்வதும், தருமத்தைப் பின்பற்றுவதும், தருமத்தைப் புகட்டுவது மாகும். அசோகரைப்பற்றிய பழங்கதைகளோ, கலிங்கப் போரையும் அதன் விளைவையும் பற்றிக்கூருமல், புத்த மதத்தைப் பரப்ப அவரது முயற்சிகளையும் அவர் மகன் மகேந்திரரும் பேரன் சுமனரும் சிங்களத்துக்குப் பிரசார கோஷ்டிகளை அனுப்பியதையும் பற்றி மட்டில் கூறுகின்றன. தருமமானது புத்தமதத்தில் ஆதாரத்தத்துவமாயிருக்கும் காரணத்தால், அசோகரது தருமப் பிரசார நோக்கமானது இப்பழங்கதைகளின் போக்கை அனுசரித்துப் புத்தமதத்தைப் பரப்புவதில் ஆர்வமாகக் கொள்ளப்பெற்றுவிட்டது. ஆனல் இந்தியாவில் தருமம் என்பது ஹிந்துமதத்திற்கு மட்டுமன்றி மற்றமதப்பகுதிகட்கும் கூட அடிப்படைத்தத்துவமாகக் கொள்ள பெற்றதொன்று. இதை மனத்திற்கொண்டே அசோகர் குறிப்பிட்ட ஒரு மதத்தின் கொள்கைகளுக்கும் பழக்கங்களுக்கும்தான் என்று தருமத்திற்குத்தடை போடாமல், எல்லா மதங்களிலும் மதப்பகுதிகளிலும் தருமம் அனுஷ்டிக்கப்பெறுகிறது என்று பன்னிரண்டாம் பாறைச் சாசனத்தில் அழுத்தமாகக்கூறி, அவரவர் பின்பற்றும் மதம் யாதாயிருப்பினும் எல்லோரிடத்திலும் தருமத்தை வளர்க்க முயற்சிக்கின்ருர். இந்த உத்தேசத்தின்படிக்கே அவர் மூன்ரும் பாறைச்சானத்தில் தருமத்தை விசேஷமாகக்கூறும் பௌத்த நூல்களில் அதிகக் கவனம் செலுத்துமாறு புத்தமதத்தினருக்குப் போதிக்கின்ருர். நாட்டில் வாழும் எல்லாப் பகுதியினருள்ளும் சகிப்புத் தன்மையும் அதன் வாயிலாக ஒற்றுமையும் நிலவ

வேண்டும் என்ற குறிக்கோளை ஏழாம் பாறைச்சாசனம் உணர்த்துகின்றது. பிரஜைகளுள் பௌத்தர் மட்டுமன்றி ஹிந்துக்கள், ஆஜீவிகர், ஜெயினர் என்ற ஒவ்வொரு பகுதியினருக்கும் தனித்தனியே உரித்தான பண்டிகை, உற்சவம், முதலியவற்றைப் பரிபாலிப்பதுடன், அவர்கள் எல்லோருடைய நலனையும் கவனிக்குமாறு புதிதாகத் தருமப் பிரசாரத்திற்கென்றே அமர்த்தப்பட்ட அலுவலர் கள் கட்டளையிடப்பெறுகின்றனர். கடைசியாக சிங்களத் திற்கு மட்டுமின்றி ஹெல்லாஸ் கிரேக்கப் (Hellenistic Greek) பிரிவைச்சேர்ந்தவைகளான ஸிரியாவிலிருந்து மாஸி டோனியாவரையிலுமுள்ள ஐந்து இராச்சியங்களுக்கும் அனுப்பப் பெற்ற தேசாந்தரப்பிரசாரக்குழுக்கள் கீழ்க் கண்ட இருசாசனங்களிற் கூறப்பெறுகின்றன இத் தேசத்தவர் தருமபோதனை பெற்றார் என்று பதின்மூன்றும் பாறைச்சாசனமும், மருத்துவ உதவிகள் பெற்றார் என்று இரண்டாம் பாறைச்சாசனமும், கூறுகின்றன. தருமத் தைக் கூறுதலும் பொதுநலனைக் கூறுதலும் எங்கும் சாசனங்களில் நெருங்கி இணைந்தே வருகின்றன. சாசனங்களின் தொனியிலிருந்தும் போக்கிலிருந்தும், அவற்றிற் கூறப்பெற்ற செயல்முறைகள்யாவும் அண்டை நாட்டுமக்களின் ஆத்மீக நலன்கள் மட்டுமின்றி இம்மை நலன்களும் பெருக வேண்டுமென்ற குறிக்கோளுடன் அமைந்தவையென்றும், அவர்களைப்புத்தமதத்திற்கு மாற் றும் உத்தேசத்துடன் அவை அமையவில்லை என்றும், ஓரளவு ஊகிக்கலாம். மதத்திலும் தெய்வப்பிரசாதத் தைப்பற்றிய கருத்திலும், தேவர்க்கும் மனிதர்க்கும் உள்ள தொடர்பிலும், மனிதர் ஒருவருக்கொருவர் உள்ள தொடர் பிலும், அதற்கு அவசியமான விட்டுக்கொடுக்கும் மனப் பான்மையிலும், ஒழுக்க நெறியின் முக்கியத்துவத்தை உணர்த்துவதே தருமத்தைக் கடைப்பிடிப்பதின் நோக்க மாகும். ஆப்கானிஸ்தானத்தில் காண்டஹார் (Kandahar)

என்னுமிடத்தில் கிரேக்கபாஷையிலும் அரமெயிக் (Aramaic) பாஷையிலும் அமைந்த ஒரு சிறு கல்வெட்டைச் சமீபகாலத்தில் கண்டுபிடித்திருக்கின்றனர். இது முதல் பாறைச்சாசனத்தின் கருத்தை ஒட்டிப் பிராணி வதையைத்தடை செய்யும் ஒரு சாசனம். அசோகரது பாட்டனுராகிய சந்திரகுப்தருக்கு ஸெலியூகஸ் நிகேட (Seleucus Nicator) ரால் ஒப்புக் கொடுக்கப்பட்ட நிலப்பாகத்தின் ஒரு பகுதியாகிய காண்டஹார் அசோகரது காலத்திலும் சாம்ராச்சியத்தில் அடங்கியிருந்தது என்பது ஒரு புறமிருக்கட்டும். தம் செல்வாக்கு ஹெல்லாஸ்கிரேக்க இராச்சியங்களிலும் பரயிருந்தது என்று அசோகர் சொல்லிக் கொள்வது நம்பக்கூடியதே என்பதை இக்கல் வெட்டானது காட்டுகின்றது. அத்துடன் முடிந்தவிடங்களிலெல்லாம் சாசனங்களைப் பெயர்த்தெழுதுமாறு அவர் விடுத்த உத்தரவுகள் எந்த அளவில் கீழ்ப்படியப்பட்டன என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டுமாகும்.

பெரும்பாலும் மேற்கூறியவாறே அசோகர் தருமம் என்ற அடிப்படைத் தத்துவத்தைத் தம் பேரரசின் நிர்வாகத்தைத் திருத்தியமைக்க உபயோகித்தார். அவர் அரியணை ஏறியதற்கு எதிர்ப்பு இல்லாமலில்லை. அத்துடன் அவரது சாம்ராச்சியம் மிகப்பரந்ததாக இருந்ததுடன் சாசனங்களில் 'சன்னியாசிகளும் இல்வாழ்வோரும்' 'பணக்காரரும் ஏழைகளும்' என்பது போன்ற சொற்றொடர்களாற் குறிக்கப்பெற்றபடி, பல சிறு மதங்களாகவும் வகுப்பினராகவும், ஜாதிகளாகவும் பிரிபட்டிருந்தது. இந்திய அரசர் யாவருமே ஏதேச் சாதிகாரம் படைத்தவர். சமூகக் கலகம் ஏற்பட்டுவிடுமோ என்ற பயமும் இராணுவப் போட்டியும், இராஜீயச் சதியும்தான் அவர்களது ஏதேச் சாதிகாரத்தைக் கட்டுப்படுத்தி வைக்கக்கூடியனவாக இருந்தன. அசோகரது ஆட்சி முறையோ அவரது பாட்டனும் தகப்பனும் விட்டுச் சென்றது. சட்டங்களுக்குச்

சரியான பொருள்கண்டு அமுல் நடத்த உதவும் அடிப் படை உத்தேசங்களை விதிப்பதற்காக அவர் உபயோகித்த வழிகளுள் இச்சாசனங்களும் சேர்ந்தவை. தம்தம் புத்திக்கு எட்டியபடித் தம்தம் பகுதியில் நிர்வாகம் நடத்தும் வாய்ப்புக் கீழ்த்தர அலுவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. ஆயினும் அது இடைவிடாமற் சரிபார்த்துக் கண்காணிக்க வழிசெய்யும் ஒரு ஏற்பாட்டுக்கு உட்பட்டிருந்தது. ஒழுக்கநெறி அல்லது தருமத்தை அமுல் நடத்துவதையே ஒருவகை உத்யோகஸ்தருக்கு வேலையாகக் கொடுக்கப்பட்டிருந்தது. அநியாயமாகச் சிறைப்படுத்துவதையும் சித்திரவதை செய்வதையும் தடுக்கவும், தண்டனை நிறைவேற்றப்படுமுன் மேலதிகாரிகளுக்கு விண்ணப்பம் செய்து கொள்ளவும், வகை செய்யப்பட்டிருந்தது. வைத்திய உதவி, பாட்டைகளமைத்தல், மனிதர்க்கும் பிராணிகட்கும் குடிதண்ணீர் வசதிசெய்தல், நிழல் மரங்கள் நடுதல், பிராணிகள் தங்கி இளைப்பாற இடம் அமைத்துக்கொடுத்தல், இவற்றுக்கு வகை செய்து கொடுப்பதற்கும் அவர்களது அதிகாரம் விஸ்தரிக்கப் பெற்றிருந்தது. தனிமனிதர்க்குள்ளும் சமூகத்துள்ளும் நிலவ வேண்டிய உறவுகளில் ஒழுக்கமுறையைச் செயலளவிற்காண்பிப்பதின் பொருட்டு இராசரீக அமைப்பு முழுதும் இதை மனத்திற்கொண்டே நிறுவப் பெற்றிருந்தது.

ஆக, அசோகரது செயல்களெல்லாம் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தலையே நோக்கமாகக் கொண்டவை. அவர் விரும்பியது ஒரு குறிக்கோளைப் பிரசாரம் செய்வதோ சட்டத் தொகுதிகளை விதிப்பதோ அல்ல. மதச் சட்டமாயினும் அரசியற் சட்டமாயினும் அதன் சாராம்சம் தம் நிலையைத் தாமே அறிந்து கொள்வதுடன் பிறர்க்கும் மதிப்புத் தருவதாகும், என்ற இதுவே அசோகர் போதித்தது. இதற்கு அவர் உபயோகித்தது கற்றுக்

கொடுத்தல் என்ற போதனு முறையாகும். கற்றுக் கொடுத்தல் என்பது இதைச் செய், அதைச் செய் என்று விதிப்பது மூலமாகவும் சிந்தனைகள் மூலமாகவும் இரு விதமாக ஏற்படலாமாயினும், வெறும் விதி பயன்படாது என்பது அவரது திடமான தீர்மானம். ஆகையால் சிந்தனை என்று அவர் சொல்லிக்கொள்ளும் உபாயத் திலேயே தம் நம்பிக்கை முழுதையும் வைத்திருந்தார். அவரது கருத்துப்படிச் சிந்தனை யென்பது வெறும் தத்துவ விசாரமோ தியானயோகமோ அல்ல. ஒருவர் மற்றவ ரோடு பழகுவதிலும், அவரவர் உள் அபிப்பிராயங்களிலும், வெளி நாட்டங்களிலும் அது தோற்றமளிக்கவல்லது. அதன் விளைவாக மனித உறவுபற்றியும் கௌரவம் பற்றியும் முன்னிருந்ததைவிட விரிந்ததும் அர்த்தப்புஷ்டி யுள்ளதுமான ஒரு கருத்தின் வசப்பட்டு, விரோதங்களும் பயங்களும் பிறர் பொருளுக்கு ஆசைப்படுவதும் குறையு மாறு வேறு குறிக்கோள்களிலும் விருப்பங்களிலும் மன தானது திருப்பிவிடப்படும். சகிப்புத் தன்மை என்பது பிறர் எப்படிப் போனலென்ன என்று ஒதுக்கித்தள்ளும் மனப்பான்மையல்ல, அது அவர்களைத் திருத்தும் ஓர் சக்தி யாகும், என்ற புதியதொரு பொறுப்புணர்ச்சி இதிலிருந்து உதயமாகும். ராஜரீக வியவகாரங்களிலும் சமூக வியவ காரங்களிலும் நடத்திக் காட்டப்படவேண்டியதான தரும நெறியைப்பற்றிய ஒரு உட்பொருளுணர்ச்சியை இது உண்டாக்கவல்லது. தாம் ஒழுக்கம் தவராதவர் என்று நம்பிக்கொண்டு பிறரைத் தம் அளவுகோலைக்கொண்டு அளவிடுவதற்கும், அனுஷ்டிக்க முடியாத ஒன்றை உபதேசம் செய்துவிட்டுத் தருமநெறிப் பிரசாரம் செய்து விட்டதாகத் தம்மையே தாம் ஏமாற்றிக்கொள்வதற்கும், இது நேர்மாருனது. அசோகரது இத் திட்டம் செயல் முறையில் அவரது நிர்வாகத்தில் எந்த அளவு பயனளித்தது என்பதைப் பற்றிச் சரித்திரத்திலிருந்து

ஒரு தகவலும் கிடைக்கவில்லை. ஆயினும், தற்காலத்தைப் போலத் தனி மனிதருடைய பிரச்சினைகளும் மனிதச் சமூகங்களின் பிரச்சினைகளும் அறநெறியையே அடிப் படையாகக் கொண்டு விளங்கவேண்டிய எக்காலத்திலும், இச் சாசனங்களிற் கூறப்பெற்ற அடிப்படைத் தத்துவங்களிலும் முறைகளிலும் நாம் புதியதொரு பொருள் பொதிந்து கிடக்கக்காண்போம்.

# சாசனங்கள்

## 1

## சாசனங்கள்: சந்தர்ப்பங்களுக்கேற்ப அவற்றின் மாற்றமும் திரும்பக் கூறலும்

### பாறைச்சாசனம் XIV

தருமத்தை[1]ப் பற்றிய இச்சாசனங்கள் தேவர்க்குப்

[1] தருமம் என்பது மதச்சடங்குகளில் அக்கறை, சமூகக் கடமை, என்றவற்றின் தொனிகளோடு உடன்தோன்றும் 'சட்டம்' 'ஒழுக்க நெறி' என்ற பொருள்களையும் சேர்த்துக் குறிக்கும். இச் சொல்லை எப்படி மொழி பெயர்த்தாலும் இப்பலமுகமான பொருள்களுள் ஒன்றே பிரதானமாக நின்று, மற்றவை குன்றி, வேறு மதக் கோட்பாடுகளுடனும் சட்ட திட்டங்களுடனும் நெறி முறைகளுடனும் சந்தேகத்துக் கிடமான ஓர் ஒப்புமையைத் தொனிக்கச் செய்துவிடும். ஆகையால் இம் மொழி பெயர்ப்பில் அநேகமாக எல்லாவிடங்களிலும் தருமம் என்ற சொல் அப்படியே கூறப்பெற்றிருக்கிறது. ஆனால் சில சமயம் சந்தர்ப்பத்திற் கேற்ப ஒழுக்க நெறியை முக்கியப் பொருளாகக் கூறவேண்டுமென்று தோன்றினால், அவ்வாறே மொழி பெயர்க்கப்பெற்றிருக்கிறது. ஹிந்து மதத்திலும் புத்த மதத்திலும் சமூகம், கோட்பாடு, மத இரகசியம், ஆகிய இவற்றுடன் தொடர்புள்ள பொருள்களைக் கொண்ட தருமம் என்ற இச் சொல்லை அசோகர் தமக்கே உரிய ஒரு பாணியில் உபயோகிக்கின்றார். தருமம் என்ற சொல்லை அப்படியே வைத்துக்கொண்டால், அசோகர் கொண்ட பொருளை வாசகரும் கண்டு, எந்த அளவுக்கு அது குறுகிய வரையரைகளைத்தாண்டித் தரும நெறி பற்றிய விரிவான புதியதொரு உட்பொருளுணர்ச்சிக்கு வழிகோலும், என்பதைத் தீர்மானித்துக் கொள்ள உதவும். தருமத்தின் பொருளையும் உட்பொருள்களையும் பற்றிய விவாதம் முன்னுரையில் இருப்பது காண்க.

பிரியனுன பிரியதரிசி[2] (Priyadarsi) அரசனின் ஆணையால் பொறிக்கப் பெற்றிருக்கின்றன. ஒழுக்க நெறியைப் பற்றிய இச் சாசனங்களுள் சில மிகச் சுருக்கப்பெற்றும், சில சிறிது குறைவாகச் சுருக்கப்பெற்றும், சில சுருக்கப் பெருமலும், வெட்டப் பெற்றிருக்கின்றன.

நான் ஆளும் பிரதேசங்கள் பரந்துகிடப்பதால் எல்லாச் சாசனங்களும் எல்லா விடங்களுக்கும் பொருந்தக் கூடியவையல்ல. ஆதலின் தேவைக்குத் தக்கவாறு பல கல்வெட்டுக்களைச் செய்திருப்பினும் இன்னும் பல வற்றைச் செய்யுமாறு பணிப்பேன்.

---

[2] சாசனங்களில் எங்கும் அசோகர் இப்பெயரைத் தனியே கூறிக் கொள்வதில்லை. அவற்றில் இரண்டிடங்களில் இது முன்பின்னுகை, 'பிரியதரிசி ராஜன்', 'ராஜா பிரியதரிசி', என்று மாறிவருகிறது. மற்ற விடங்களில் 'தேவானும்பிரியன் பிரியதரிசி ராஜன்,' 'தேவானும்பிரியன்,' 'தேவானும்பிரியன் அசோகன்,' என்று பல்வேறு சொற்றெடர்கள் வருகின்றன. அசோகர் அரியணை யேறியபோது இப் பட்டங்களைச் சூட்டிக்கொண்டார். அவரே இவற்றை மௌரிய வம்சத்தில் தோன்றிய தம் முன்னோர்களுக்கு உபயோகிக்கின்றுர். பிற்பட்ட கல்வெட்டுக்களில் அசோகர் காலத்தில் மற்ற தேசங்களில் அரசுபுரிந்த மன்னர்க்கும் இவை உபயோகிக்கப்பெறுகின்றன. ஆனல் இவ்வரசர்களே இவற்றைத் தமக்குச் சூட்டிக்கொண்டனரா, அல்லது அசோகர் இவர்க்குப் புதிதாக இவற்றைச் சூட்டினரா, என்பதைத் தீர்மானிக்கப் போதிய ஆதாரம் கிடைக்கவில்லை. மரியாதையைக் குறிக்கும் பட்டங்களாக இவை முதலில் தோன்றின. 'மாட்சிமைதங்கிய' 'உயர்வுற்ற' 'மேன்மைதங்கிய' என்பவை போன்ற தற்காலப் பட்டங்களைப் போலவே இவைகளும் இருந்திருக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

தேவானும்பிரியன் என்பது அப்படியே பொருள் கொண்டால் தேவர்க்குப்பிரியன், தேவர்களின் அன்புக்குரியவன், என்று ஆகும். 'பிரியதரிசி' என்பதற்குப் பிறர் நன்மையில் நாட்டம் கொண்டவன், அன்போடு பார்ப்பவன், (அல்லது கருத்தை மட்டில் கொண்டால்) உதாரகுணம் படைத்தவன், என்று பொருள் கிடைக்கும்.

ராஜா என்பதற்கு அரசன் என்பது மட்டில் பொருள் ஆகும். ஆனல், இப் பட்டங்கள் மரியாதையைக் குறிப்பனவாதலின் சில மொழிபெயர்ப்பாளர்

உபதேசங்கள் கவர்ச்சிகரமாயிருக்கும் காரணத்தாலும், அவற்றைத் திரும்பத் திரும்பக் கேட்டபிறகு ஜனங்கள் அவற்றிற் கூறப்பெற்ற விதிகளின்படி நடப்பர் என்ற (நம்பிக்கையின்) காரணத்தாலும், சில சாசனங்கள் திரும்பத் திரும்பப் பொறிக்கப் பெற்றிருக்கின்றன.

சிற்சில பகுதிகள் இடத்திற்கு ஏற்றவையாக இல்லாததாலோ, அவற்றை நீக்க வேறு காரணங்கள் இருந்தமையாலோ, பெயர்த்தெழுதுவோனின் தவறுகளாலோ, சில சாசனங்கள் அரைகுறையாக வெட்டப்பெற்றிருக்கலாம்.

---

புனிதத்தன்மையும் அனுக்கிரக புத்தியும் வாய்ந்த, மாட்சிமை தங்கிய, என்பது போன்ற சொற்றொடர்களை அசோகரைக் குறிக்க உபயோகித்திருக்கின்றனர். வேறு சிலர் இச் சொற்களைப் பிராகிருதத்தில் இருக்கிறபடியே கூறுவதோடோ, அவற்றைச் சமஸ்கிருதச் சொற்களாக ஆக்குவதோடோ, நின்றுவிட்டனர். மற்றும் சிலர், தேவர்களுடைய அன்புக்குரியவர், உதாரகுணம் படைத்தவர், என்றிவ்வாறு சொற்படியே பொருள் கொண்டு மொழி பெயர்த்திருக்கின்றனர். இம் முடிவுகள் எதுவும் திருப்தியளிக்கக்கூடியவையாகத் தோன்றவில்லை. தற்காலத்தில் வழங்கும் பட்டங்கள் பொருத்தமற்ற பொருள்களைத் தருவதுடன் முன்பின் காலமயக்கத்தையும் உண்டாக்குகின்றன. பிராகிருதச் சொற்களின் புதுமையும், அவை பல்வேறு உருவத்தில் இருப்பதும், பழக்கமில்லா வாசகர்களுக்கு மனக் குழப்பத்தைத் தருகின்றன. கேட்டுப் பழகாத பட்டங்களை அடைமொழிகளாகத் திரும்பத் திரும்ப உபயோகிப்பது, அவை சம்பிரதாயத்திற்காகச் சொல்லும் வெறும் வார்த்தைகள் என்பதை மறைத்து, குழப்பத்தை விளைவிக்கும் புதியதொரு பொருளைத் துருத்தி விடுகின்றது. ஆகையால் நாங்கள், பிரியதரிசி ராஜன், ராஜா பிரியதரிசி, அரசன் பிரியதரிசி, என்றே மொழிபெயர்த்து, சிற்சில சமயம் மாறுதல் வேண்டி, தேவர்கள் அன்புக்குரியவன் என்ற அடை மொழியையும் சேர்த்து இப் பட்டங்களால் அசோகரை எங்கும் குறித்திருக்கின்றோம்.

## 2

# சாசனங்கள் ஏற்பட்டதன் காரணமும் அவற்றின் உத்தேசமும்:

## *கலிங்கப்போர், அசோகரது மனமாற்றம், தரும ஜெயக்குறிக்கோள்.*

### பாறைச்சாசனம் XIII

கலிங்க தேசம் தேவர்க்குப் பிரியனை பிரியதரிசியரசனுல் ஆட்சிதொடங்கி எட்டாம் ஆண்டில் ஜெயிக்கப் பெற்றது. இலட்சத்து ஐம்பதாயிரம் பேர் சிறைபிடித்து எடுத்துச் செல்லப்பெற்றனர். இலட்சம்பேர் கொல்லப் பெற்றனர். இதைப்போல் பன்மடங்கு உயிர் துறந்தனர்.

கலிங்கதேசத்தைத்தம் ஆட்சிக்குட்படுத்தியதிலிருந்து பிரியதரிசியரசன் தருமத்தைத் தெரிந்து கொள்வதிலும், அதன்பாற்படுவதிலும், அதை உபதேசிப்பதிலும் மிகுந்த நாட்டம் கொண்டிருக்கின்ருன்.

தேவர்க்குப் பிரியன், கலிங்கத்தை வென்றவன், இப்பொழுது மன வேதனை நிரம்பியுள்ளான். படுகொலை, சாவு, நாடு கடத்தல், இவையின்றிப் புதிதாக ஒரு தேச மக்களை ஆட்சிக்குட்படுத்தமுடியாது என்பதை உணர்ந்து அவன் ஆழ்ந்த துயரமும் கழிவிரக்கமும் கொண்டுள்ளான்.

அரசன் மனம் தவிப்பதற்கு வேருெரு முக்கியமான காரணமும் உண்டு. பிராமணரும் சிரமணரும் (குரவரும்

துறவியரும்)[3] பிற மதத்தினரும் இல்வாழ்வோரும் யாவரும், மூத்தோர்க்கும் பெற்றோர்க்கும் ஆசிரியர்க்கும் கீழ்ப்படிந்து நடக்கும் யாவரும், நண்பரிடத்தும் தோழரிடத்தும் உதவியாளரிடத்தும் சுற்றத்திடத்தும் வேலையாட்களிடத்தும் அடிமைகளிடத்தும் அன்பு பூண்டொழுகும் யாவரும், தங்கள் இஷ்டர் படுகொலை செய்யப்பட்டதையும் நாடு கடத்தப்பெற்றதையும் நினைந்து வருந்தாமலிரார். தங்களுக்கு நேரில் கேடுவிளையாமல் தப்பியவரும்கூட தங்கள் அன்புக்குரிய நண்பர், தோழர், உதவியாளர், சுற்றம், முதலியோர் படும் துன்பத்தால் தாங்களும் மிகுந்த துன்பத்தை அடையவே செய்வர். இவ்வாறு இத்துயரத்தில் யாவரும் பங்குகொள்வராதலின் இது பிரியதரிசியரசன் மனத்தை அழுத்தி வருத்துகின்றது. [மேலும் யவனரது (அதாவது கிரேக்கரது) நாட்டைத் தவிரப் பிராமணர் சிரமணர் இல்லாத நாடே இல்லையெனலாம்.] மக்கள் யாதேனுமொரு மதத்தைப் பற்றி வாழாத இடமே கிடையாது. ஆக, கலிங்கத்தில் கொல்லப்பட்டோ இறந்துபட்டோ சிறைபிடிக்கப்பட்டோ போன ஜனங்களின் எண்ணிக்கை உள்ளதில் நூற்றில் ஒன்றோ ஆயிரத்தில் ஒன்றோ இருப்பினும் இது அரசனின் மனத்தைத் துயரத்தில் அழுத்தியே இருக்கும்.

---

[3] பிராமணர் என்ற சொல் பிராமண சாதியைக் குறிப்பதல்ல. இது துறவியருள் அக்காலத்தில் நிலவியபல வகுப்புக்களைக் குறிக்கும். சிரமணர் என்பதும் வேறு சில துறவியர் வகுப்பைக் குறிக்கும். இரு சொற்களும் சேர்ந்து இந்துக்களுள்ளும் பௌத்தர்க்குள்ளும் இருந்த எல்லாத் துறவியரையும் குறிக்கும். இனிவரும் இடங்களில் இச்சொற்றொடரை இந்து பௌத்தத் துறவியர் என்றோ அல்லது சுருக்கமாகக் குரவரும் துறவியரும் என்றோ குறிப்போம்.

ஒருவன் தனக்குத் தீங்குசெய்தாலும் அது பொறுக்கக்கூடிய குற்றமாயிருப்பின் அதை மன்னித்துவிட வேண்டும் என்பது இப்பொழுது பிரியதரி யரசனின் கொள்கை. தன் ஆட்சிக்குள் வந்த காட்டுச் சாதியினரையும் கூட (அதாவது வெகு தொலைவில் தன்னால் ஜெயிக்கப்பெற்ற நாடுகளின் ஓரங்களில் வசிக்கும் பின்னடைந்த வகுப்பினரையும் கூட) இத்தகைய குறிக்கோளையும் வாழ்க்கை முறையையும் பின்பற்றத் தூண்ட வேண்டுமென்பது பிரியதரிசி யரசனின் விருப்பமாகும். ஆனால் பச்சாதாபத்தால் இத்தகைய மனமாற்றத்தை அடைந்திருந்தபோதிலும், அவர்களைக் குற்றம் புரிவதிலிருந்து தடுத்து அதன்வாயிலாக அவர்கள் கொலைத் தண்டனை அடையாமல் இருக்கும்படி செய்வதற்காக அவர்களைத் தண்டிக்கும் அதிகாரத்தைச் செலுத்தியே வருவான் என்பதை நினைவூட்டுகின்றான்.

ஏனெனில் எல்லா உயிர்களும் அச்சமின்றித்தன்னடக்கத்துடன் பாரபட்சத்திற்கு உட்படாமல் மனம் மகிழவாழ வேண்டுமென்பது பிரியதரிசியரசனின் விருப்பமாகும்.

ஜெயங்களிலெல்லாம் தார்மிக ஜெயமே (தருமத்தைக் கொண்டு பெறும் ஜெயமே, அதாவது தருமவிஜயமே) மேலானதென்பது பிரியதரிசியரசனின் கருத்து. தம் நாட்டினுள்ளும், அதன் எல்லைக்கப்பால் அறுநூறு யோஜனை (சுமார் மூவாயிரம் மைல்) தூரத்தில் யோன (கிரேக்க) அரசன் அந்தியோகன் ஆட்சிபுரியும் தேசம் வரையிலுள்ள நாடுகளிலும், அந்தியோகனது நாட்டிற்கு மப்பால் துரமயன், அந்திகினி, மகன், அலிகசுந்தரன்,[4]

---

[4] இங்குவரும் ஐந்து அரசர்களும் பின்கூறப்பெற்றவர்களே என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். அந்தியோகன் = ஸிரியாவில் ஆட்சிசெய்த அந்தியோகஸ் II (261-246 BC) துரமயன் = எகிப்தில் ஆட்சிசெய்த ப்டாலமி II பிலடெல்பாஸ் (Ptolemy II Philadelphos 285—247 B. C

ஆகிய நான்கு அரசர் ஆட்சிசெலுத்தும் நாடுகளிலும், அதுபோல் தெற்கே சோழநாட்டையும், பாண்டிய நாட்டையும், (இது இந்தியத் தீபகற்பத்தின் தென் கோடியில் உள்ளது) தாண்டிச்சிங்களம் வரையிலும், பிரியதரிசியரசன் இத்தார்மிக ஜெயத்தைப் பலதடவை பெற்றிருக்கின்றான்.

இங்கே அரசனது நாட்டிலுள்ளும், யோனர்களுள்ளும் [இவர்கள் வடமேற்கு எல்லைப்புறத்திலுள்ள ஒரு நாட்டில் வாழ்ந்தவர், கிரேக்கராயிருக்கலாம்] காம்போஜர்களுள்ளும் [இவர் யோனர்களின் அண்டை நாட்டினர்] நாபகநாபபங்க்தியருள்ளும் [இவர் வட எல்லையில் இமயமலையின் அடிவாரத்தில் வாழ்ந்தவராயிருக்கலாம்], போஜருள்ளும் பைத்திரியாணிகருள்ளும், ஆந்திரருள்ளும் பௌலிந்தருள்ளும் [இந்நான்குவகுப்பினரும் தீபகற்பப் பாகத்தில் வாழ்ந்துவந்தவர்] எங்கும் மக்கள் அரசனது தரும உபதேசத்தைக் கேட்டு நடக்கின்றனர்.

பிரியதரிசியரசனின் தூதர் செல்லாத நாடுகளிலும் மக்கள் தருமத்தைப்பற்றியும் அதைப்பொருத்து அரசன் பிறப்பித்த சட்டதிட்டங்களைப் பற்றியும் கேள்வியுற்றுத் தாங்களே தருமநெறியைப்பற்றுகின்றனர். இனியும் பற்றி நிற்பர்.

---

அந்திகினி = மாஸிடோனியாவில் ஆட்சிபுரிந்த அந்திகோனஸ் கோனதாஸ் (Antigonos Gonatas, 278-239 B.C.) மகன் = சைரீனியில் ஆட்சிபுரிந்த மகாஸ் (Magas of Cyrene, 300-258 B.C.) அலிகசுந்தரன் = எபிரஸில் ஆட்சிபுரிந்த அலெக்ஸாந்தர் (Alexander of Epirus, 272?-258 B.C.) அசோகரது ஆட்சியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளுக்குக் காலநிர்ணயம் செய்வதற்கும், அவரது காலத்தில் போக்குவரவு வசதி எவ்வளவு தூரம் எட்டியிருந்தது என்பதைத் தெரிந்துகொள்வதற்கும், கல்வெட்டின் இப்பகுதி மிக்க அவசியமானது. மேலும் இவர்கள் யாவரும் ஒருங்கே உயிரோடிருந்ததாகக் குறிப்பிடக் கூடிய காலத்தின் இறுதி 258 B.C. ஆகையால், இதுவே இச்சாசனத்தின் சுமாரான காலமாகும்.

தருமத்தாலல் பெறப்படும் ஜெயமே [ஜெயித்தவர், ஜெயிக்கப்பெற்றவர் இரு சாரார்க்குள்ளும் பகைமையை வளர்க்காமையால்] சந்தோஷத்தைக் கொடுக்கவல்லது. தருமஜெயத்தால் கிடைக்கும் சந்தோஷமே நிலைத்து நிற்கக்கூடியது. இச் சந்தோஷமும் அவ்வளவு முக்கியமல்ல. மறுமையில் கிடைக்கவிருப்பதையே பெரும் பயனாகப் பிரியதரிசியரசன் கருதுகின்றான்.

எனக்குப் பின்வரும் என்பிள்ளை கொள்ளுப் பேரன் முதலானோர், புதிதாக நாடுபிடிப்பதால் லாபம் யாதுமில்லை என்பதை உணரவேண்டுமென்றே இச்சாஸனத்தைப் பொறித்துவைக்கின்றேன். அப்படி அவர்கள் வெற்றிகளைப் பெற்றாலும், வெறிகொள்ளாமல் குறைந்த தண்டனைகளைத் தருவதோடு திருப்தியடையட்டும். தருமஜெயமே உண்மையான ஜெயம் என்பதை அறிந்து கொள்ளட்டும்.

இது இம்மையிலும் மறுமையிலும் நன்மை தரவல்லது. தருமத்தில் விருப்பமே (தருமரதியே) அவர்களது விருப்பமாக இருக்கட்டும். ஏனெனில் இத்தகைய விருப்பமே இம்மையிலும் மறுமையிலும் நலன் தரும்.

# 3

# தருமத்தைப் புகட்டுவதன் நோக்கங்கள்

## பாறைச்சாசனம் IV

பல நூற்றாண்டுகளாகப் பிராணிகளை வதை செய்வதும், ஜந்துக்களைத் துன்புறுத்துவதும், பந்துக்களை மதியாமல் நடப்பதும், குரவருக்கும் துறவியருக்கும் அவமரியாதை செய்வதும், அதிகரித்துக்கொண்டு வருகின்றது.

ஆனால் இப்பொழுது பிரியதரிசியரசன் தருமத்தைப் பற்றி நடப்பதால் [யுத்தத்திற்கு அழைக்கும்] யுத்த பேரிகையின் ஸ்தானத்தில், தெய்வங்கள் விமானங்களிலும் யானைமேலும் ஊர்ந்துவரும் காட்சிகளையும் வாணக் காட்சிகளையும் மற்ற திவ்வியக் காட்சிகளையும் காண மக்களை அழைக்கும் தரும பேரிகை முழங்குகிறது.

பிரியதரிசியரசன் தருமத்தைப் புகட்டிவருவதால் பல நூற்றாண்டுகளாகக் காணப் பெறாத அளவில் பிராணி வதையும் ஜந்துக்களைத் துன்புறுத்துவதும் குறைந்திருக்கின்றது. மக்கள் தமக்குள்ளும் சுற்றத்துடனும் அன்பு பூண்டொழுகுவது மிகுந்திருக்கின்றது. குருமாரிடமும் துறவியரிடமும் மரியாதையும், தாய் தகப்பன், மூத்தோர் இவர்களிடம் பணிவும் அதிகரித்திருக்கின்றது.

இவ்வாறும், வேறுவகையாலும். தரும அனுஷ்டானம் அதிகரிக்கப் பெற்றிருக்கின்றது. பிரியதரிசியரசன் தரும நெறிநிற்றலை நிறுத்தாது தூண்டிவருவான். கால முடிவு வரை அவனது பிள்ளைகளும், பேரன்களும், கொள் பேரன்களும் எப்பொழுதும் தருமம் கடைப்பிடித்தலைத் தூண்டிவருவர்; தாங்களும் தருமத்தில் ஊன்றி நின்று

தம் பிரஜைகட்கும் தருமத்தையும் நல்லொழுக்கத்தையும் புகட்டுவர்.

ஏனெனில் கருமங்களுள் தலைசிறந்தது தருமம் புகட்டுவது. நல்லொழுக்க மற்றவனுக்கு தருமத்தைக் கடைப்பிடிப்பது முடியாத காரியம். இதைவிருத்தி செய்வதோ, குறையாமலாவது இருக்கும்படி பார்த்துக்கொள்வதோ மெச்சத்தகுந்தது.

தருமத்தைப் பெருக்குவதற்கும், குறையாமற் காப்பதற்கும் என் சந்ததியாரை ஊக்குவதற்காக இச்சாசனம் பொறிக்கப்பெற்றது. முடிசூட்டிப் பன்னிரண்டாண்டு சென்று பிரியதரிசியரசன் இதை எழுதப்பணித்தான்.

# 4

# தருமத்தைப் புகட்டும் வழிகள்

## 1. ஒழுக்கப்பிரகடனத்தைப் பற்றிய அசோகரது சிந்தனைகள்

### தூண் சாசனம் VII

தேவர்க்குப் பிரியன் பிரியதரிசியரசன் பின்வருமாறு கூறுகின்ருன் :

இதற்கு முன்னும் மக்களின் தருமப்பற்றை வளர்க்கும் வழிகளைப்பற்றி அரசர்கள் ஆலோசித்து வந்திருக்கின்றனர். ஆனுல் மக்கள் போதிய அளவு நன்னெறியில் முன்னேறவில்லை.

இதைக்குறித்துப் பிரியதரிசியரசன் பின்வருமாறு கூறுகின்ருன் :

முற்காலத்திலும் அரசர் மக்களின் தருமப்பற்றை வளர்க்கும் முறைகளைக் குறித்து யோசித்திருக்கின்றனர். ஆனுல் மக்கள் தகுந்த அளவு ஒழுக்கத்தில் முன்னேறவில்லை. எப்படி மக்கள் தருமத்தைவிடாமற்பற்றுமாறு தூண்டுவது? எவ்வாறு வேண்டிய அளவு நன்னெறியை விருத்திசெய்வது? தருமத்தை ஊக்கும் வாயிலாக எவ்வாறு நான் அவர்களை முன்னேற்றக்கூடும்? இவ்வாறு எனக்குத் தோன்றியது.

இப்பொருள் பற்றி மேலும் பிரியதரிசியரசன் கூறுவது :

தருமத்தைப் பற்றி யாவரும் கேட்குமாறு விளம்பரம் செய்வேன் ; மக்கட்குத் தரும உபதேசம் செய்யவேண்டுமென்று உத்திரவிடுவேன். இவ் விளம்பரங்களையும் உத்

தரவுகளையும் கேட்டு மக்கள் தருமவழி நிற்பர். தருமம் வளர்வதின் வாயிலாக அவர்கள் தங்கள் நிலையை உயர்த்திக்கொண்டு முன்னேறுவர். இவ்வாறு எனக்குத் தோன்றியது. இதற்காக நான் தரும விளம்பரங்களை விடுத்திருக்கின்றேன்; பலவகையில் ஒழுக்க உபதேசங்களும் சமய உபதேசங்களும் செய்ய ஏற்பாடு செய்திருக்கின்றேன்.

பெரும் அளவான மக்கள்மேல் ஆணை செலுத்தும் என் தலைப்பணியாளர் தரும நெறிகளை விளக்கிப் பரப்புவர். பல நூறாயிரம் மக்கள்மேல் ஆணை செலுத்தும் மாகாண அதிகாரிகட்கும் தருமத்திற்பற்றுக்கொண்ட ஜனங்களுக்கு வழிகாட்டும் முறையை விளக்கிக் கூறியிருக்கின்றேன்.

பிரியதரிசியரசன் கூறுகின்றான் :—

இதைக்குறித்து மேலும் ஆலோசனை செய்து நான் தரும விளம்பரங்களுடன் கூடிய தூண்களை நாட்டியிருக்கின்றேன். தருமத்தைப்பரப்புவதையே தம் வேலையாகக் கொண்ட தருமமகாமாத்திரர் என்ற அதிகாரிகளை நியமித்திருக்கின்றேன். தருமவிளம்பரங்களும் விடுத்திருக்கின்றேன்.

[இதன்பின் வழிப்போக்கர்களுக்காக நிருவப்பெற்ற தங்குமிடங்களையும் தண்ணீர்ப்பந்தல்களையும் சாலையோரம் நடப்பெற்ற நிழல் மரங்களையும் பற்றி ஒரு பகுதி வருகின்றது. இது பகுதி VI B 3ல் கொடுக்கப்பெற்றிருக்கின்றது. இதற்குமேல் அசோகர் தருமமகாமாத்திரர்களின் அலுவல்களைக் கூறுகின்றார்].

பிரியதரிசியரசன் கூறுகின்றான் :

தருமத்தைப் பரப்புவதற்காக அமர்த்தப்பெற்ற என் அதிகாரிகள் துறவிகட்கும் இல்வாழ்வோர்க்கும் நலந்தரும் பலசேவைகளில் ஈடுபட்டிருக்கின்றனர். எம்மதத்தினரிடத்தும் தம் கவனத்தைச் செலுத்துமாறு அவர்

களுக்கு அதிகாரம் அளிக்கப்பெற்றிருக்கின்றது. அவர்களுள் சிலரைப்பௌத்த சங்கத்தில் (பௌத்தத்துறவிகளின்) காரியங்களைக் கவனித்துக்கொள்ளுமாறும், சிலரைப்பிராமணத்துறவிகளையும் ஆஜீவிகத் துறவிகளையும் கவனித்துக்கொள்ளுமாறும், சிலரை நிர்கிரந்தர்களை (ஜைனத்துறவிகளை)க் கவனித்துக் கொள்ளுமாறும், சிலரை எஞ்சிய பற்பல சமயப்பகுதியினரைக் கவனித்துக் கொள்ளுமாறும், பணித்திருக்கின்றேன். இவ்வாறு வெவ்வேறு சமயங்களுக்கென்று வெவ்வேறு அதிகாரிகளை அமர்த்துவதுடன் எல்லா மதத்தினரையும் ஒருங்கே கவனிக்கும்பொருட்டு தருமமகாமாத்திரர்கள் அமர்த்தப் பெற்றிருக்கின்றனர்.

பிரியதரிசியரசன் சொல்லுகின்றான்:

இவர்களும் வேறுபல உயர்தர அலுவலர்களும் நானும் அரசியரும் தந்துதவும் கொடைகளைக் கவனித்துவருகின்றனர். இங்கும் (அதாவது பாடலிபுத்திரத்திலும்) மாகாணங்களிலும் தானத்திற்கேற்ற பாத்திரங்களைப் பொறுக்கிப் பலவகைகளில் என் தேவியர்க்குக் குறிப்புக்களை அனுப்புகின்றனர். சீரிய தரும காரியங்கள் விருத்தியாகவேண்டும், தருமநெறிநிற்றல் (மிகுதியாகவேண்டும்) என்ற எண்ணத்துடன் சில அதிகாரிகளை என்மக்களும் வேறு இராணிகளின் மக்களும் தந்துதவும் கொடைகளைக் கண்காணிக்குமாறு பணித்தேன். தரும காரியங்கள் விருத்தியாவதும் தருமநெறிநிற்றல் மிகுதியாவதும், இரக்கம் தாராளம் சத்தியம் தூய்மை பதவிசு நற்குணம் இவை ஓங்குவதேயாகும்.

பிரியதரிசியரசன் சொல்லுகின்றான்:

நான் எந்த எந்த நற்காரியங்கள் செய்கின்றேனோ அவற்றையெல்லாம் மக்களும் பின்பற்றி அவற்றையே மாதிரியாகக்கொண்டு வாழ்கின்றனர். இப்படிச்செய்வதால் பெற்றோர்க்கும் ஆசிரியருக்கும் கீழ்ப்படிவதிலும்,

பெரியோரை வணங்குவதிலும், குருமார்க்கும் துறவியர்க்கும் ஏழைகட்கும் நலிவுற்றோர்க்கும் அடிமைகட்கும் ஏவலாளருக்கும் கூட மரியாதை செய்வதிலும், அவர்கள் முன்னேறியுள்ளனர்; இனியும் முன்னேறுவர்.

(இதன்பின் தருமத்தின் சிந்தனையைப்பற்றியும், கொல்லாமையைப் பற்றியும் ஓர்பகுதி வருகின்றது. இது கீழே பகுதி V. 1ல் காணப்பெறும். பிறகு சாசனங்கள் என்றும் நிலைத்திருக்குமாறு கற்களில் பொறிப்பதானது தருமத்தை வளர்க்கும் விதத்தை விளக்கி இத்தூண் சாசனம் VII முடிவுகிறது.)

இத்தருமசாசனமானது (என்) மக்களும் கொள்பேரன்களும் (ஆட்சிபுரியும்வரையும்) சூரியசந்திரர் (பிரகாசிக்கும் வரையும்) நிலைத்துநின்று பின்பற்றப் பெறவேண்டும் என்ற நோக்கத்துடனேயே பொறிக்கப்பெற்றிருக்கின்றது. ஏனெனில் இதைப்பற்றி நிற்பவர் இம்மையிலும் மறுமையிலும் சுகம் பெறுவர். முடிசூடி இருபத்தேழு வருஷங்கள் சென்றபிறகு நான் இச்சாசனத்தைத்தீட்டப் பணித்தேன்.

இத் தருமசாசனத்தைக் குறித்துப் பிரியதரிசியரசன் கூறுகின்றான் :

என்னாளும் நிலைத்திருக்கவேண்டி எங்கெங்கெல்லாம் கற்றூண்களும் கற்றலங்களும் கிடைக்குமோ அங்கங்கெல்லாம் ஒழுக்கம் பற்றிய இச்சாசனம் பொறிக்கப்பெற வேண்டும்.

## தூண்சாசனம் VI

*பிரயதரிசியரசன் கூறுகின்றான் :*

முடிசூடிப் பன்னிரண்டாண்டுகளுக்குப் பிறகு மக்களின் நல்வாழ்வையும் சந்தோஷத்தையும் கருதி, அவர்கள் பழய வாழ்க்கை முறையைத்துறந்து குறிப்பிட்டிருக்

கும் அந்தஅந்த விஷயங்களில் தருமநெறியில் ஓங்கும் பொருட்டு, தருமசாசனங்களைப் பொறிக்கப்பணித்தேன்.

இவ்வழியேதான் மக்களின் நல்வாழ்வும் சுகமும் ஆக்கப் பெறமுடியும் என்பதை நான் உணர்ந்திருப்பதால், என் சுற்றத்திற்குமட்டிலோ என்தலைநகரில் வாழ்வோர்க்கு மட்டிலோ அல்லாமல், என் அருகாமையில் இல்லாத யாவர்க்கும் சந்தோஷத்தை உண்டாக்குவது எவ்வாறு என்று நான் யோசித்த வண்ணம் இருக்கின்றேன். யாவர் விஷயத்திலும் நான் ஒரேவிதமாக நடந்துகொள் கிறேன்.

எல்லா வகுப்பினரைக்குறித்தும் ஒன்றுபோல் எனக்குக் கவலை உண்டு.

மேலும் எல்லா மதத்தினரையும் பலவகையான கொடைகளால் நான் கௌரவித்திருக்கின்றேன். ஆயி னும் நான் நேரிற்சென்று அவர்களைக்காணும் கௌவரத் தையே என் முக்கியமான கடமையாக எண்ணு கின்றேன்.

முடிசூடி இருபத்தாறு ஆண்டுகட்குப்பின் நான் இத் தருமச்சாசனத்தைப் பொறிக்கப் பணித்தேன்.

## 2. நிர்வாகஸ்தர் என்ற தன்மையிலும் ஆதரிச மாகவும் அசோகர் தருமப்பிரசாரத் திட்டத்தில் பங்குகொண்டது

### பாறைச்சாசனம் VIII

முற்காலத்தில் அரசர்[5] உல்லாசபிரயாணம் (விஹார

5. இங்கு அசோகர் தம் முன்னோர்களைக் குறிக்க தேவர்க்குப்பிரியர் தேவனம்பிரிய :) என்ற சொற்றொடரை உபயோகித்திருக்கின்றார்.

யாத்திரைகள்) செய்வதுண்டு. இப்பிரயாணங்களில் அவர்கள் வேட்டையாடுவதிலும் மற்றப்பொழுது போக்குக்களிலும் ஈடுபட்டனர்.

ஆனால் பிரியதரிசியரசனே முடிசூடிப் பத்தாண்டுகளுக்குப் பின் ஞான ஒளியைப் பெற்றவனாக (ஸம்புத்தனாக) ஆகிவிட்டான். அதுமுதல் அவன் செய்யும் யாத்திரைகளெல்லாம் நன்னெறிக்கான யாத்திரைகளே. (தர்மயாத்திரைகளே.)

அவன் குருமாரையும் துறவியரையும் போய்க்கண்டு அவர்களுக்குத்தானங்கள் வழங்குகின்றான். முதியோரைச்சந்தித்து அவர்களுக்குப் பணம் கொடுக்கின்றான். நாட்டுப்புறத்து மக்களைச்சந்தித்து அவர்களுடன் தருமத்தைப்பற்றி ஆராய்ந்து அவர்களுக்குத் தருமத்தைப் போதிக்கின்றான்.

வேறுவித யாத்திரைகளிலிருந்து பெறுவதைவிட இத்தகைய யாத்திரைகளிலிருந்து பிரியதரிசியரசன் மிகுந்த உவகை பெறுகின்றான்.

## பாறைச்சாசனம் VI

பிரியதரிசியரசன் கூறுகின்றான் :

இதற்குமுன், தினத்தின் எந்த நேரத்திலும் இராச்சிய காரியத்தைக் கவனிப்பது என்பதோ நிர்வாகத்தைப்பற்றி அரசரிடம் தெரிவிப்பது என்பதோ கிடையாது. ஆகையால் இப்போது நான் உணவு செய்துகொண்டிருக்கும் பொழுதும், அந்தபுரத்திலோ உள்ளறைகளிலோ இருக்கும் பொழுதும், கன்றுகாலிகளைக் கவனித்து கொண்டிருக்கும் பொழுதும், உல்லாசநடையிலோ மதவழிபாடுகளிலோ ஈடுபட்டிருக்கும்பொழுதும், எந்தநேரத்திலும் எந்தவிடத்திலும் என் அதிகாரிகள் என்னைக்காணவும்

என்னிடம் என் பிரஜைகளின் காரியங்களைப்பற்றிக்கூறிக் கொள்ளவும் ஏற்பாடு செய்திருக்கின்றேன். நான் எங்கும் மக்களின் காரியங்களைக் கவனிக்கிறேன். நான் வாய் மூலமாக உத்திரவிட்ட ஒரு கொடையோ அறிக்கையோ, அல்லது என்னுல் தலைப்பணியாளருக்குக் கவனிக்கும்படி விடப்பெற்ற ஒரு அவசரக் காரியமோ, சபையில் அபிப்பிராயபேதத்தையோ சர்ச்சையையோ கிளப்பினுல், இது எந்நேரமாயினும் நான் எவ்விடமிருந்தாலும் எனக்குத் தெரிவிக்கப் பெறவேண்டும். இது என் உத்தரவு.

நான்செய்யும் வேலையைப்பற்றியும், பொதுமக்களின் காரியங்களில் எனது விழிப்பைப்பற்றியும் நான் ஒரு பொழுதும் முற்றிலும் திருப்தி கொள்வதில்லை. மக்களின் நன்மையைப்பேணுவதே எனது முக்கியக்கடமை என்பது என் எண்ணம். அக்கடமையை நிறைவேற்றுவதென்பது உழைப்பையும் இடைவிடா முயற்சியையும் ஆதாரமாகக் கொண்டது.

எல்லா மக்களின் நலன்களையும் பேணுவதைத்தவிர வேறு முக்கிய வேலை எனக்குக் கிடையாது. உயிர்கள் யாவற்றையும் இவ்வுலகில் சந்தோஷமாக வாழவைப்பதும் மறுமையில் அவை சுவர்க்கத்தை அடைய உதவுவதும் ஆகிய என் கடனைத்தீர்ப்பதற்கே என் உழைப்பு யாவும் பயன்படுகிறது.

இத்தருமச்சாசனம் என்றும் நிலைத்திருக்கவேண்டும் என்பதற்காகவும் எல்லோருடைய நன்மையையும் கருதி என்பிள்ளைகளும் பேரன்களும் கொள்பேரன்களும் இதைப் பின்பற்றி நடக்கவேண்டும் என்பதற்காகவும், நான் இதைப் பொறிக்கப் பணித்துள்ளேன். ஆனுல் சிரத்தையும் சலியா உழைப்புமின்றி நான் சொல்வதைச் செய்வது கடினம்.

## பாறைச்சாசனம் V

பிரியதரிசியரசன் சொல்லுகிறான்.

நற்காரியம் செய்வது கடினம். ஒரு நற்காரியத்தைச் செய்து முடித்தவன் கடினமான ஒரு வேலையைச்செய்த வனாவான். ஆயினும் நான் பல நற்காரியங்கள் செய் திருக்கின்றேன். என் பிள்ளைகளும் பேரன்களும் காலம் உள்ளவரை என் சந்ததியாரும் என் உதாரணத்தைப் பின்பற்றுவராயின் அவரும் நற்காரியம் செய்தவராவர். ஆனால் இச்சாசனத்தின் ஒரு பகுதியையேனும் மீறி நடப் பவன் தீயகாரியம் செய்பவனாவான். தீயது செய்வ தெளிது.

(இதற்குமேல் இச்சாசனம் தொடர்ந்து, தருமமகாமாத் திரர்களின் அலுவல்களைக் கூறுகின்றது. இதைக்கீழே பகுதி VI B. 2ல் காணலாம்.)

## பாறைச்சாசனம் X

இக்காலத்தும் பிற்காலத்தும், தான் தருமவழியில் நிற் பதை மக்கள் கேட்டு அவர்களும் தருமவழியில் நடக்க வேண்டும் என்ற ஒரு காரணத்திற்காகவே பிரியதரிசி யரசன் புகழையும் பெருமையையும் விரும்புகின்றான். மற்றபடி அவன் பெருமைக்கும் புகழுக்கும் மதிப்புக் கொடுக்கவில்லை.

(இச்சாசனத்தின் இறுதிப்பகுதியானது பாபத்தை விலக்குவதில் தருமத்தின் உபயோகத்தை விரித்துக் கூறு கின்றது. இது கீழே பகுதி VI A. 1ல் காணப்பெறும்.)

V

# தருமத்தின் தன்மை

## 1. ஆழ்ந்த சிந்தனை, அஹிம்ஸை, என்ற உருவில்

### தூண் சாசனம் VII [IV. 1ன் தொடர்ச்சி]

பிரியதரிசியரசன் கூறுகின்றான் :
நன்னெறி பற்றிய சட்டதிட்டங்களாலும், ஆழ்ந்த சிந்தனையாலும், ஆக இவ்விரு வழிகளாலேயே மக்களை தருமத்தில் முன்னேறும்படி தூண்ட முடியும். இவ்வி ரண்டினில் சட்டதிட்டங்கள் அவ்வளவு முக்கியமல்ல. ஆழ்ந்த சிந்தனையே தலைசிறந்தது. நான் விடுத்த சட்ட திட்டங்களுள், சில பிராணிகளை ஹிம்ஸிக்கவே கூடாது என்ற விதிகளும் மற்றும் பலவும் அடங்கும். ஆயினும், பிராணிகளைத் துன்புறுத்தாமலும் கொல்லாமலும் நடந்து கொள்வதிற்கூட, ஆழ்ந்த சிந்தனையினாலேயே மக்கள் தருமவொழுக்கத்தில் மிக்க அதிகமாக முன்னேறியிருக் கின்றனர்.

## 2. உள்நோக்கு, நற்குணம், சேவை, என்ற உருவில்

### தூண் சாசனம் II

பிரியதரிசியரசன் கூறுகின்றான் :
தருமம் நன்மைபயக்கும். ஆனால் தருமம் என்பது

4

எத்தகையது? பாபகாரியங்களை முடிந்தவரை விலக்கு வதும், நற்காரியங்களை மிகுதியாகச் செய்வதும், தயை யும் தானமும் வாய்மையும் தூய்மையும் தருமமாகும்.

நான் பல வழிகளில் மக்களுக்குப் பார்வைதானமும் (அதாவது ஆத்மீக அறிவு தானமும்) செய்திருக்கின் றேன். இருகாற் பிராணிகள், நாற்காற்பிராணிகள், பறவைகள், நீர்வாழ்ப்பிராணிகள் ஆகிய ஜீவன்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுப்பது உள்படப் பல அன்பான காரி யங்களைச் செய்யச்சட்டங்கள் பிறப்பித்துள்ளேன். வேறு பல நற் காரியங்களையும் செய்திருக்கின்றேன்.

இத்தருமச்சாசனத்தின்படி மக்கள் நடக்கவேண்டும் என்பதற்காகவும், இது வெகு காலம் நிலைத்திருக்க வேண்டும் என்பதற்காகவும், இதைப் பொறிக்க உத்திர விட்டுள்ளேன். இதை முற்றிலும் பின்பற்றுபவன் நற் காரியங்களைச் செய்வான்.

## தூண் சாசனம் I

பிரியதரிசியரசன் கூறுகின்றான் :

முடிசூடி இருபத்தாறு ஆண்டுகளுக்குப்பின் இத்தரு மச்சாசனத்தைப் பொறிக்க உத்தரவிட்டேன்.

இம்மையிலோ மறுமையிலோ, தருமத்தில் ஆழ்ந்த பற்றின்றி, ஆழ்ந்த ஆத்ம சோதனையின்றி, தாழ்ந்தபணி யின்றி, [பாபத்தில்] மிகுந்த பயமின்றி, மிகுதியான ஆர்வமின்றி, சுகத்தை அடையமுடையாது. இருப்பி னும், என்போதனையால் தருமத்தில் ஈடுபாடும் தருமத் தில் விருப்பமும் நாளுக்குநாள் அதிகரித்து வந்திருக் கின்றது, இனியும் தொடர்ந்து அதிகரிக்கும்.

உயர்தரத்தினர் நடுத்தரத்தினர் கடைத்தரத்தினர் ஆகிய என் அலுவலர் யாவரும் நான் செய்திருக்கும் போதனைகளைப் பின்பற்றி நடந்து, தங்கள் உதாரணத்தா லும் செல்வாக்காலும் தருமத்தில் நிலைக்காத மனமுடை

யோரையும் அதன்பால் இழுக்கின்றனர். தருமத்தின் படி ஆட்சிபுரிவதும், தருமத்தின்படியே நீதி வழங்குவதும், தருமத்தின்படியே மக்களின் சுகத்தைப் பேணுவதும், தருமத்தின்படி அவர்களைக்காப்பதும் இவர்கள் அநுசரிக்கவேண்டிய விதிகள் ஆகையால், எல்லைப்புற மகாமாத்திரர்களும் இவ்வாறே என் கட்டளைகளை நிறைவேற்றுகின்றனர்.

## 3. மரியாதை, சத்தியம், என்ற உருவில்

### பிரம்மகிரி பாறைச்சாசனம் II

பிரியதரிசியரசன் கூறுகின்ருன் :

யாவரும் பெற்ருேர் சொற்கேட்டு நடக்கவேண்டும். உயிரின் சிறப்பையும் புனிதத்தன்மையையும் மதித்து ஒழுகவேண்டும். உண்மை பேசவேண்டும். இந்த நற்குணங்களை யாவரும் பயிலவேண்டும்.

இதுபோலவே சீடர் தம் ஆசிரியர்களைக் கௌரவிக்க வேண்டும். குடும்பங்களில் யாவரும் சுற்றத்தாரிடம் மரியாதையுடன் நடந்துகொள்ளவேண்டும். இது தொன்றுதொட்டு வரும் தருமநெறி. இது நீண்ட ஆயுளைக்கொடுக்கவல்லது. மக்கள் இதன்படி நடக்க வேண்டும்.

சபடன் என்ற எழுதுவோனுல் பொறிக்கப்பெற்றது.

## 4. தானம், யாவரும் ஓர் குலம், என்ற உருவில்

### பாறைச்சாசனம் XI

பிரியதரிசியரசன் கூறுகின்ருன் :

தருமதானம், தருமத்தை ஒட்டி மக்கள் பரஸ்பர வாழ்க்கையை அமைத்துக்கொள்வது, தருமத்தை ஒட்டிச் செல்வத்தைப் பகிர்ந்து கொடுப்பது, தருமத்தில் சகோதரத்துவம், ஆகிய இவற்றுக்கு நிகரான தானமில்லை.[6]

அடிமைகளையும் ஏவலாளரையும் ஒழுங்காக நடத்துவதும், பெற்றோர் சொற்கேட்டு நடப்பதும், நண்பர் தெரிந்தவர் சுற்றத்தார் குருமார் துறவியர் இவர்களுக்கு தாராளமாகக் கொடுப்பதும், பிராணிவதை செய்யாமலிருப்பதும், மேலே கூறிய தரும தானத்தில் அடங்கும்.

---

[6] வழக்கமாகச் செய்யும் செயலையும் தார்மீகக் குறிக்கோளுடன் சம்மந்தப்படுத்துவதின் மூலம் தார்மீகமாக்கிவிடுவதற்காகவேண்டி தருமம் என்ற சொல்லை வழக்கமாக மக்கள் புரியும் செயல்களைக் குறிக்கும் சொற்களுடன் இணைத்து தம் சாசனம் யாவற்றிலும் தருமம் என்பதற்குத் தாம் கொண்ட பொருளின் இலக்கணம் கூறுவது அசோகர் பின்பற்றும் ஒருவழி. இங்கே வரும் நான்கு கருத்துக்களிலும் இவ்வழியையே அசோகர் மறுபடியும் உபயோகிக்கின்றார். உதாரணமாக, யுத்தம் ஜெயம் இவற்றின் அனுபவம் அவர்மனத்தில் **தரும விஜயம்** அதாவது தருமத்தைக் கொண்டு ஜெயித்தல், என்ற கருத்தைத் தோற்றுவித்தது. இது ஒன்றே உண்மையான ஜெயமாகும். இதுவே உண்மையான சந்தோஷங்களை யெல்லாம் **தரும ரதியாக** அதாவது தருமத்தில் கொள்ளும் சந்தோஷமாக ஆக்கிவிடுகிறது. உல்லாசயாத்திரை செய்யும் பழக்கம் **தரும யாத்திரைகள்,** அதாவது தருமப் பிரசாரத்திற்காக யாத்திரை செல்லுதல், என்ற எண்ணத்தைத் தோற்றுவித்தது. ஒன்று போக ஒன்றாகப் பல கேளிக்கைகளை நுகர்வதைக்காட்டிலும் இது அதிகமான மனநிறைவையும் சந்தோஷத்தையும் கொடுக்கவல்லது. இவ்வாறே சமயவொழுக்கமானது தருமம் செய்தல் பிச்சையிடுதல் இவற்றுடன் இணைக்கப்பெற்றது. இது தார்மீகப் பொறுப்பிற்கு ஒரு கண்மூடித்தனமான வெறும் பதிலியாகத் தாழ்ந்துவிடாதவரை இதை அசோகர் ஊக்குவித்து இதன்படி ஒழுகுகின்றார். உண்மையானதானம் **தர்ம தானம்,** அதாவது தருமத்தின தானம். அத்துடன் **தர்ம ஸம்ஸ்தவம்** அதாவது பிறரை அறிமுகம் செய்துகொண்டு அவர்களுடன் தரும உறவை ஏற்படுத்திக்கொள்வது, **தரும ஸம்விபாகம்,** அதாவது தருமத்தில் மனம் வைத்துச் செல்வத்தைப்ப கிர்ந்துகொடுப்பது, **தர்ம சம்பந்தம்,** அதாவது

தகப்பன், மகன், சகோதரன், எஜமானன், நண்பன், தெரிந்தவன், அண்டை அயலான், உள்பட யாவரும் "இது நல்லது, இதைக்கட்டாயம் செய்யவேண்டும்" என்று கூறிக்கொள்ளவேண்டும்.

ஒருவன் இவ்வாறு நடந்துவருவானாகில் இத் தரும தானத்தினால் இவ்வுலகில் சுகத்தையும் மறுமையில் அளவற்ற புண்ணிய பலத்தையும் அடைவான்.

## 5. சடங்கு, வழிபாட்டு முறை, என்ற உருவில்

### பாறைச் சாசனம் IX

தேவர்க்குப்பிரியனான பிரியதரிசியரசன் கூறுகின்றான்: மக்கள் பல்வேறு சடங்குகளைச் செய்கின்றனர். வியாதியுற்றிருக்கும்போதும், பிள்ளைகள் பெண்கள் இவர்களின் திருமணங்களிலும், பிள்ளைப் பேற்றின்போதும், யாத்திரை புறப்படும்போதும், இப்படி வேறுசிலகாலங்களிலும் சடங்குகள் செய்யப்பெறுகின்றன. குறிப்பாகப் பெண்டிர்

---

தருமத்தில் சகோதரத்துவம், என்ற கருத்துக்கள் இணைந்திருக்கின்றன. அடுத்தாற்போல் வரும் சாசனத்திலும் (பாறைச்சாசனம் IX) சமயச் சடங்குகளையும் வழிபாட்டு முறைகளையும் விளக்க அசோகர் இதே யுக்தியைக் கையாளுகின்றார். தர்ம மங்கலங்களைத் தவிர, அதாவது தருமம் சம்பந்தப்பட்ட மங்கலச் சடங்குகளைத்தவிர, மற்ற சடங்குகள் நிச்சயமாகப் பயனளிக்குமென்று கூறமுடியாது என்பது அசோகரது கொள்கை. அக்காலப் பழக்கவழக்கங்களின் தாழ்ச்சியையும், பிறர்வருத்தம் கருதாமையையும் கொடுமையையும் ஒருங்கே அறிவுறுத்தி, அவற்றுக்குப் பதிலாக எளிய நெறிமுறைகளையும் தெளிவான குறிக்கோள்களையும் கூறும் அடிப்படையான ஒழுக்கநெறிகளுடன், யுத்தம் சமூக உறவுகள் அரசியல் நிர்வாகம் மதவொழுக்கம் ஆகிய இவைகளை இணைத்து மாற்றியமைப்பது, என்ற ஒன்றே மேலே கூறிய முறையின் விளைவாகும்.

பலவிதமான முக்கியமில்லாத அர்த்தமற்ற சடங்குகளில் ஈடுபடுகின்றனர்.

சடங்குகள் செய்வது சரியே. ஆனால் வழக்கப்படி செய்வது அவ்வளவாகப் பயன்தராது. தருமத்தில் நிற்கும் சடங்கே (தர்ம மங்கலமே) மிக்கப் பயன்தர வல்லது. இது அடிமைகளையும் வேலையாட்களையும் ஒழுங்காக நடத்துவதும், ஆசிரியரிடம் மரியாதையுடன் நடந்துகொள்வதும், உயிர்ப் பிராணிகளைத் துன்புறுத்தாமலிருப்பதும், குருமாருக்கும் துறவியர்க்கும் தானங்கள் வழங்குவதுமாகும். இவையும் இவைபோன்ற மற்றவையும் தருமச்சடங்குகள் எனப்படுவன.

ஆகையால் தகப்பன், மகன், எஜமானன், நண்பன், தெரிந்தவன், அண்டை அயலான் உள்பட யாவரும், இச்செயல்களைக் குறித்து, இவை நல்லவை, இவற்றால் ஆகவேண்டியகாரியம் கைகூடும்வரை இவற்றைச் செய்யவேண்டும், நான் இவற்றைச் செய்வேன், என்று சொல்லக்கூடியதாக இவை இருக்கவேண்டும்.

இப்படியில்லாத சடங்குகள் பயன்தருமோ என்று சந்தேகமே. தந்தாலும் தரலாம், தராமலுமிருக்கலாம். தவிர அவற்றின் பலன் இம்மையோடு நிற்கும்.

தருமச் சடங்கோ காலத்தினாற்கட்டுப்படாதது. இவ்வுலகில் அதன்பயன் கிடைக்காவிடினும் மறுமையில் அது அளவற்ற புண்ணிய பலனைத்தரும். அது இம்மையில் பலன் தருவதாக இருந்துவிட்டால், இவ்வுலகில் விரும்பிய காரியமும், மறுமையில் அளவற்ற புண்ணிய பலமும் ஆகிய இரண்டுமே தருமச்சடங்கால் கிடைத்து விடும்.

[7] மேலும், தானம் சிறப்புவாய்ந்தது என்று சொல்லப்

[7] பின்வரும் பகுதியானது கிர்நார், தௌலி, ஜௌகதா, இவ்விடங்களிலுள்ள பாறைச் சாசனங்களில் மேலே கூறியுள்ள இரண்டு பகுதிகளின் இடத்தில் காண்கின்றது.

படுகிறது. தருமதானத்தைக் காட்டிலும், அல்லது தரும லாபத்தைக் காட்டிலும் மேலான தானமில்லை. ஆகையால் நண்பனே, நன்மையைக் கோறுபவனே, சுற்றத்தானே, தோழனே சமயம் வரும்போது இது சிறந்தது, நீ இதைச்செய்யவேண்டும், இதைச் செய்தால் சுவர்க்கம் அடையலாம், என்று சொல்லி மற்றவரைத் தூண்ட வேண்டும். சுவர்க்கம் போவதைக்காட்டிலும் மேலாகச் செய்யக்கூடியது எது?

VI

# தருமத்தின் பிரயோகங்கள்

## *A.* பரந்த தோற்றங்கள்

### 1. தனி மனிதனின் பாபச் செயல்களையும் மனவெழுச்சிக்களையும் ஒழிப்பதில்

#### தூண்சாசனம் III

பிரியதரிசியரசன் சொல்லுகிருன்:

இந்த நற்காரியத்தை நான்செய்தேன் என்று நற்காரியத்தை ஒருவன் சொல்லிக்கொள்ளுகின்ருன். இப்பாவச்செயலை நான் செய்துவிட்டேன், இதுதான் பாபம் என்பது, என்றிப்படித் தன் குற்றத்தை ஒருவனும் உணர்வதில்லை. இப்படித் தன்னையே ஆராய்ந்து உணர்வது கடினம்.

ஆயினும், "மூர்க்கத்தனம், குரூரம், கோபம், இறுமாப்பு, பொருமை, இவை பாபத்தை விளைவிக்கும். இம்மனவெழுச்சிகள் என்னைக் கெடுக்கும்படி நான் விடக்கூடாது," என்று ஒருவன் சொல்லிக்கொள்ளவேண்டும். "இச் செயல் எனக்கு இம்மையில் நன்மைதரவல்லது, ஆனல் இச் செயலோ மறுமையில் எனக்கு நன்மை பயக்கும்," என்று தன் செயல்களை ஒருவன் பகுத்தறிந்து கொள்ளவேண்டும்.

#### பாறைச்சாசனம் X (IV 2-ம் தொடர்ச்சி)

பிரியதரிசியரசன் செய்யும் முயற்சி யெல்லாம் மறுமைக்காவும் மக்கள் பந்தத்திலிருந்த விடுபடுவதற்காகவுமே. ஏனெனில் பாவமே பந்தம்.

மற்ற குறிக்கோள்களையெல்லாம் உதறித்தள்ளிவிட்டுப் பெருமுயற்சி செய்தாலன்றிச் செல்வந்தரோ ஏழைகளோ இக்குறிக்கோளை அடைய முடியாது. ஏழைகளைக்காட்டி லும் செல்வர்க்கே இது செய்தற்கரியது.

## 2. தனி மனிதனின் மதவிரோதச் செயல்களை ஒழிப்பதில்

### மாஸ்கீ பாறைச்சாசனம்

(இச்சாசனம் அசோகர் தாம் புத்தமதத்தைத் தழுவி யதைக் கூறிக் கொள்வதுடன் தொடங்குகின்றது. இவ் விஷயம் கீழே பகுதி VIB. 4. ல் வரும். இச்சாசனம் மேலும் தொடர்ந்து, சமய அனுபவம் ஏழை பணக்காரர் யாவர்க்கும் ஒன்றுபோல் கிடைக்கக் கூடியது, என்ற அசோகரது துணிவைக் கூறுகிறது. பாறைச்சாசனம் X-ல் பாபச் செயல்களையும் மனவெழுச்சிகளையும் தவிர்க்க வேண்டும் என்பதைப் பற்றிய அசோகர் கூற்றுக்களில் வரும் சொற்களும் சொற்றொடர்களுமே இங்கும் வரு கின்றன.)

ஜம்பூத்துவீபத்தில் மானிடருடன் முன்பு கலக்காத தேவர்கள் இப்போது கலக்கும்படி செய்யப்பட்டுவிட்ட னர்.[8] ஆயினும், நான் சாதித்த இச்சாதனையானது

[8] இச்சாசனம் பாடங்களில் சிறிது பேதத்துடன் பன்னிரண்டு கல்வெட்டுக்களில் வருகின்றது. சில பாடங்களில் தேவர்களுடன் கலவாத மானிடர் தேவர்களுடன் கலந்து விட்டனர் என்று வருகிறது. இரு பாடங்கள் (ரூப்நாத், மாஸ்கீ கல்வெட்டுக்கள்) கலவாதிருந்தவர் தேவர் என்று கூறுகின்றன. இந்த வித்தியாசத்தால் மொழிபெயர்ப் பிலும் பின்வருமாறு வித்தியாசம் ஏற்பட்டு விட்டது. முதலாவது

ஒரு ஏழைக்கும் கூட, அவன் தருமத்தில் பற்றுக் கொண்டிருந்தால், கிட்டக் கூடியது. இது பணக்காரர்க்கு மட்டிலே, என்று நினைப்பது தவறு. ஏழை பணக்காரர் இருவருமே "நீ இவ்வாறு நடந்துவந்தால் போற்றுதற் குரிய இச் சாதனை வெகு காலம் நின்று ஒன்றரை மடங் காக விருத்தி யடையும்," என்று உபதேசிக்கப் பெற வேண்டும்.

## 3. சமூகத்தின் மதச்சகிப்பின்மையையும் பக்ஷபாதத்தையும் ஒழிப்பதில்

### பாறைச்சாசனம் VII

பிரியதரிசியரசன் தன் இராச்சியம் எங்கிலும், எல்லா மதத்தினரும், வாழ வேண்டும் என்பதை விரும்பு கின்றான்.

---

பாடத்தை முக்கியமாகக் கொள்பவர் அசோகரது மதப்பிரசாரத்தின் விளைவாகச் சம்பூத் துவீபத்திலுள்ள மக்கள் மதப்பற்றுடையவராகச் செய்யப்பட்டு விட்டனர் என்று இதற்குப் பொருள் கூறுகின்றனர். இரண்டாவது பாடத்தை முக்கியமாகக் கொள்பவர், அசோகர் பல மதப்பிரிவுகளையும் தம் முயற்சியால் ஒரு மதமாக்கினார் என்று பொருள் கூறுகின்றனர். பிரம்மகிரிக் கல்வெட்டில் வரும் பாடம் ஒன்றில்தான் இவ்வாக்கியம் சிதைவுறாமல் இருக்கின்றது. அதுவும் இத்தகராறைத் தீர்க்கக் கூடவில்லை. ஏனெனில் அவ்வாக்கியத்திற்கு மானிடர் தேவர் களுடன் கலக்கும்படி செய்யப் பெற்றுவிட்டனர் என்றோ, மானிடர் தேவர்களுடன் கூட ஒன்று சேர்க்கப் பெற்றுவிட்டனர் என்றோ, பொருள் கொள்ளலாம்.

இத்தகராறு அவ்வளவாக வாசகங்களுக்குப் பொருள் கூறுவதில் உள்ள சிரமத்தால் எழுந்ததல்ல. பிற்காலத்தில் வந்த மொழி பெயர்ப் பாளர் அசோகரைப் புத்தமதத்தையோ ஹிந்து மதத்தையோ பரப்பு

ஏனெனில், எல்லா மதத்தினருமே புலன்களை அடக்குவதையும் மனத்தைச் சுத்தமாக வைத்துக்கொள்வதையும் நோக்கமாகக் கொண்டவர்கள். ஆனால் மக்கள் வேறுபட்ட ஆசைகளையும் பற்றுக்களையும் உடையவர்; தங்களது கடமைகளை முற்றிலுமோ ஓரளவு மட்டிலுமோ செய்வர்.

நிறையக் கொடுப்பதற்கு இயலாவிடினும் புலனடக்கமும் மனச்சுத்தியும் நன்றியறிவும் நிலைத்த பக்தியும் இருப்பது போற்றத்தக்கது, இன்றியமையாதது.

## பாறைச்சாசனம் XII

பிரியதரிசியரசன் எல்லா மதத்தினரையும், துறவு பூண்டோரையும் பூணாதோரையும், ஒன்றுபோல் தானங்களாலும் பல்வேறு கௌரவச்சின்னங்களாலும் கௌரவிக்கின்றான். ஆயினும் எல்லா மதத்தினரிடமும் மதத்தின் சாரமான நற்குணங்கள் வளர்வதை மதிக்கும் அளவுக்கு

வதில் ஈடுபட்ட ஒரு மதத்தலைவராக எண்ணத் தொடங்கியதே இதற்குக்காரணமாகும். பிறமதங்களுக்கு மதிப்பு வைத்துச் சகிப்புத்தன்மை காட்ட வேண்டும் என்பதை வற்புறுத்துவதற்காக வேறு பல சாசனங்கள் விடுக்கப்பெற்றன. இது மற்றும் சில சாசனங்களில் அசோகர் புத்த மதத்திற்குள்ளேயே பிளவுகள் ஏற்படுவதையும் மதத் தகராறுகளையும் தடை செய்வதை ஒத்திருக்கிறது. ஏனெனில் மதத்தின் சாராம் சத்தையே நாசம் செய்யவல்ல கண்மூடித்தனமான வாதப் பிரதிவாதங்களை எதிர்ப்பதே அச்சானங்களில் அசோகரது உத்தேசமாகும். அவ்வாறே அசொகர் பரப்ப நினைத்த மதம் யாவரும் தருமத்தைப் பின்பற்ற வேண்டும் என்பதேயன்றி குறிப்பிட்ட ஒரு மதப்பிரிவின் கொள்கைகளைப் பின்பற்றவேண்டும் என்பதல்ல. அசோகர் சம்பூத் துவீபத்திலுள்ள மக்களை தெய்வங்களுடன் கலக்கப் பெறாத மக்களுக்கு திருஷ்டாந்தமாகப் பொறுக்கியது, மாஸ்கீ சாசனத்திலும் அதிலிருந்து வாசகத்தில் வேறுபடும் மற்றப் பாட பேதங்களிலும் உத்தேசிக்கப்பட்ட முக்கியக் கருத்தை அழுத்தமாக உணர்த்துகிறது. மதப்பிரசாரம் செய்வதற்காக மதப்பிரசாரகர் தேவைப்படும் ஒரு பின்னடைந்த தேசமல்ல

அவன் தான் தரும் தானத்தையோ கௌரவத்தையோ மதிப்பதில்லை.

இவ்வளர்ச்சி பல உருவில் அமையலாம். ஆயினும் அநியாயமாகத் தம் மதத்தை உயர்த்தியும் பிறர் மதத்தைத் தாழ்த்தியும் பேசுவதையும், நியாயமிருப்பினும் அளவுக்கு மீறித் தாழ்த்திப் பேசுவதையும் தவிர்க்க வேண்டி, நாவை அடக்கிப் பேசுவதே அதன் வேர் ஆகும்.

பிறமதங்கள் எல்லாமே ஏதாவதொரு காரணத்தை முன்னிட்டு மரியாதைக்குரியன வாகும். அவ்வாறு மரியாதை காட்டுவதால் ஒருவன் தன்மதத்தையும் உயர்த்திக் கொண்டு பிறர் மதத்திற்கும் தொண்டு செய்பவனாக ஒருங்கே ஆகின்றான். மாறாக நடப்பதால் ஒருவன் பிறர் மதத்திற்கு அபகாரம் செய்வதுடன் தம்மதத்திற்கும் தீங்கிழைக்கின்றான். ஏனெனில் ஒருவன் தன் மதத்தை உயர்த்திப்பேசி, தன் மதத்திலுள்ள பக்தி காரணமாகவும் அதைப் பெருமைப் படுத்த வேண்டும் என்பதற்காகவும் பிறமதத்தைத் தாழ்த்திப் பேசினால், அவன் தன் மதத்

---

ஜம்பூத்துவீபம். ஆத்மீக வாழ்வு உச்ச நிலையில் இருந்த தேசம் அது என்று சமய நூல்களிலிருந்து தெரிகின்றது. ஆகையால் அசோகர் கூறுவது யாதெனில், மத அனுஷ்டானங்களிலேயே வாழ்நாளைக் கழிப்பவரும் கூட தெய்வீக உணர்வு இல்லாமலேயே இருந்துவிடலாம், ஆனால் மதத் தொண்டு செய்பவரும் மற்றோரும், ஏழைகளும் பணக்காரர்களும், யாவரும் ஒன்றுபோல் தருமத்தைக் கண்டுணர்ந்து, மதத்தின் சாராம்சமான ஒழுக்க நெறிகளைக் கடைப்பிடித்து, அசோகர் பெற்ற அனுபவத்தைத் தாமும் பெறலாம், என்பதே.

தெய்வங்களும் மானிடரும் கலத்தல் என்ற இருக்கருத்தாவது தேவரும் மானிடரும் கொண்ட ஒரு பொது நலக் குடியரசு (universus hic mundus) என்று ஸிஸெரோ இவ்வுலகத்திற்கு இலக்கணம் கூறுவதை ஒக்கும், (De legicus i. 7.23.) ஸிஸெரோ கொண்டபடி இதன் பொருள், மக்களும் தேவரும் பற்ற வேண்டிய நற்குணங்களும் பணிய வேண்டிய சட்டங்களும் ஒன்றே என்பதாகும்.

திற்கே மிகுந்த தீங்கைச் செய்து கொள்கின்றான்.

ஆகையால் ஒத்துப் போவதே சிறந்தது; ஏனெனில் ஒத்துப் போவதன் வாயிலாகவே மற்றவர் ஒப்புக் கொண்டவாறு தருமத்தின் தத்துவத்தை உணர்ந்து மதிப்புக் கொடுக்க முடியும்.

எம்மதத்தினரும் மற்றமதத்தினர் கொள்கைகளை அறிந்து கொண்டு, நல்ல கொள்கைகளைத் தாமும் பற்ற வேண்டும், என்று பிரியதரிசியரசன் விரும்புகின்றான். மதத்தின் சாரமான நற் குணங்கள் வளர்வதை எந்த அளவு மதிக்கின்றானோ அந்த அளவுக்குப் பிரியதரிசியர சன் தான் அளிக்கும் தானத்தையோ கௌரவத்தையோ மதிப்பதில்லை, என்ற இவ்விஷயம் தம்தம் மதத்தில் பற்றுடையோருக்குச் சொல்லப்பட வேண்டும்.

தருமத்தைப் பரப்புவதற்காக நியமிக்கப் பெற்ற அதி காரிகள், அரசனது இல்லத்தில் பெண்டிரைக் கண் காணிக்க ஏற்பட்ட அதிகாரிகள், கால்நடைகளையும் மேய்ச்சல் தரையையும் கவனிப்போர், மற்ற உத்யோகஸ் தர்கள், ஆகப்பல அதிகாரிகள் இக்காரியத்திற்கான அலுவல்கள் கொடுக்கப் பெற்றிருக்கின்றனர்.

ஒவ்வொருவனுடைய மதமும் ஓங்க வேண்டும் என் பதும், தருமத்தைப் பெருமைப் படுத்தவேண்டும் என்ப துமே இம்முயற்சிகளின் நோக்கமாகும்.

## 4. நாடுகள் ஒன்றை ஒன்று எதிர்க்கும் மனப் பான்மையையும் குளிர்ப்போரையும் ஒழிப்பதில்

### கலிங்கச் சாசனம் II

பிரியதரிசியரசன் கூறுகின்றான்:

ஸமாபாவிலுள்ள[9] என் அதிகாரிகளுக்குக் கீழ்க்கண்ட செயல் திட்டங்கள் அனுப்பப் பெறவேண்டுமென்று நான் பணிக்கின்றேன். எவ்வெப்பொழுது நல்லதொன்று என் கவனத்திற்கு வந்தாலும் அது செயல் முறையில் வர வேண்டுமென்று நான் விரும்புகின்றேன். அதை நிச்சயமாக அடையக் கூடிய வழியைக் காணவும் விரும்புகின்றேன். என் செயல் திட்டத்தை உங்களுக்குத் தெரிவிப்பதே இதைச் செய்து முடிக்க எனது முக்கிய வழியாகும்.

எல்லா மக்களும் என் குழந்தைகள். இவ்வுலகிலும் மறுமையிலும் என் சொந்தக் குழந்தைகளின் நன்மையையும் சுகத்தையும் தேடுவது போலவே நான் எல்லா மக்களுக்கும் அவற்றைத் தேடுகின்றேன்.

என் சாம்ராச்சியத்தின் எல்லைப் புறங்களில் வசிக்கும் என்னால் ஜெயிக்கப் பெறாத மக்கள் தங்களைக் குறித்து என் உத்தேசம் யாதோ என்று ஐயமுற்றிருக்கலாம். ஆனால் அவர்கள் என்னிடம் பயப்படாமல் என்னிடம் நம்பிக்கை கொள்ளவேண்டும்; என்னிமிருந்து துக்கத்தை அல்லாமல் சுகம் ஒன்றையே எதிர் பார்க்க வேண்டும்; மன்னிக்கக் கூடிய குற்றம் புரிந்தால் நான் அவர்களை நிச்சயம் மன்னிப்பேன் என்பதை அவர்கள் உணரவேண்டும்; என் உதாரணத்தைப் பின்பற்றி அவர்களும் தருமத்தை அனுஷ்டிக்க வேண்டும்; இம்மையிலும் மறுமையிலும் அவர்கள் சந்தோஷமாக வாழவேண்டும், என்ற இதுவொன்றே எனது ஆசை.

---

9 ஜௌகதாவிலுள்ள கல்வெட்டு ஸமாபாவிலுள்ள அதிகாரிகளுக்கும் தொளயிலுள்ளது தௌலியிலுள்ள அரசகுமாரர்க்கும் அதிகாரிகளுக்கும் விளித்து விடப் பெற்றிருக்கின்றன. இவ்விரு பட்டணங்களும் கலிங்கதேசத்திலுள்ள ஜௌகதா, தௌலி, என்ற பகுதிகளுக்குத் தலை நகரங்களாயிருந்தன.

இன்னது செய்ய வேண்டு மென்று உணர்த்தி என் விருப்பத்தையும் அசைக்க முடியாத் தீர்மானத்தையும் தெரிவிப்பதன் மூலம் [அவர்களுக்கு] என் கடனைத் தீர்ப்பதற்காகவே நான் இச்செயல் முறைகளை உங்களுக்கு விடுக்கின்றேன். இதே மாதிரி நீங்களும் உங்கள் கடமைகளைச் செய்து கொண்டு, அரசர் அவர்களுக்குத் தந்தை போன்றவர் என்றும் அவர் தம்மைப் போலவே அவர்களிடமும் அன்பு பூண்டவர் என்றும் அவர்கள் அரசரது சொந்தக் குழந்தை போன்றவர்கள் என்றும் அவர்களுக்கு உறுதி கூறி, அரசரிடம் அவர்களுக்கு நம்பிக்கையை ஊட்ட வேண்டும்.

இவ்வாறு உங்களுக்குச் செயல் முறையை உணர்த்தி, எனது அசைக்க முடியாத் தீர்மானத்தையும் கடமையையும் இவ்வாறு தெரிவித்து விட்டு, இத்திட்டத்தை எல்லா மாகணங்களிலும் அமுல் நடத்துவதற்காக அதிகாரிகளை நியமிக்கப் போகிறேன். எல்லைப் புறமக்களுக்கு என்னிடம் நம்பிக்கை ஊட்டுவதற்கும், இம்மையிலும் மறுமையிலும் அவர்களது சுகத்தைப் பேணுவதற்கும் உங்களால் இயலும். இதைச் செய்வதால் நீங்களும் சுவர்க்கம் பெறுவீர், மக்களுக்கு நான் பட்ட கடனைத் தீர்க்க எனக்கும் உதவி செய்தவராவீர்.

என் அலுவலர்கள் எப்பொழுதும் அண்டை நாட்டு மக்களின் மனத்தில் என்னிடம் நம்பிக்கையைப் புகுத்தவும், அவர்களைத் தருமத்தை அனுஷ்டிக்கும்படி தூண்டவும், வேலை செய்ய வேண்டும் என்பதற்காக இச்சாசனம் இங்கே பொறிக்கப் பெற்றிருக்கின்றது.

இச்சாசனம் நான்கு மாதங்களுக்கொரு முறை [அதாவது கோடை, மழை, குளிர் என்ற மூன்று காலங்களின் தொடக்கங்களில்] திஷ்ய நக்ஷத்திரங்களில் (அதாவது சந்திரன் திஷ்யம் அல்லது பூச நக்ஷத்திரத்தில் ஊரும் காலங்களில்) விளம்பரப் படுத்தப் பெற வேண்டும், இத்

தினங்களுக்கு ஊடேயும் விளம்பரப் படுத்தலாம். ஏற்ற தருணங்களில் தனி நபர்களுக்கும் படித்துக் காட்டப் பெறலாம்.

இவ்வாறு செய்வதால் நீங்கள் என் உத்தரவை நிறை வேற்றியவர்களாவீர்.

## B. சிறப்பான பிரயோகங்கள்

### 1. விருந்துகளையும் பிராணி வதையையும் குறைப்பது, கைதிகளை மன்னிப்பது

#### பாறைச்சாசனம் I

பிரியதரிசியரசன் தருமத்தைப் பற்றிய இச்சாசனத்தைப் பொறிக்கப் பணித்துள்ளான்.

இங்கே [அசோகரது தலைநகராகிய பாடலிபுரததில்] ஒரு உயிர்ப் பிராணியையும் வதை செய்யக் கூடாது; ஒரு உற்சவக் கூட்டமும் கூடக் கூடாது. பிரியதரிசியரசன் உற்சவக் கூட்டங்களில் பலப்பல தீமைகளைக் காண்கின்றான். ஆயினும், அவனும் சிலவகை உற்சவங்களை ஆமோதிக்கின்றான்.

முன்பு தினந்தோறும் அரசனது அடுக்களைகளில் பல நூருயிரம் உயிர்ப் பிராணிகள் கறிக்காக வதைக்கப் பெற்றன. இப்பொழுது, அதாவது தருமத்தைப் பற்றிய இச்சாசனம் பொறிக்கப் பெறும் காலை, இரண்டு ஆண் மயில்களும் (மயிற்சேவல்களும்) ஒரு ஆண் மானும் ஆக மூன்று உயிர்களே தினந்தோறும் வதைக்கப் பெறுகின்றன. அம்மானும் சில நாட்களில் வதைக்கப் பெறுவதில்லை. இனி இம்மூன்று உயிர்களுமே வதை செய்யப் படமாட்டா.

#### தூண் சாசனம் V

பிரியதரிசியரசன் கூறுகின்றான் :

முடிசூடி இருபத்தாறு ஆண்டுகள் கழிந்தபின் நான் கீழ்வரும் உயிர்களைக் கொல்லக் கூடாதென்று பணித்

தேன் : கிளிகள், மைனுக்கள், அருணங்கள், சக்கர வாகங்கள், அன்னங்கள், நாந்தீ முகங்கள், புருக்கள்; (அல்லது கொக்குகள்,) வௌவால்கள், தாயெறும்புகள், குடிநீர் ஆமைகள், எலும்பிலா மீன்கள் (சிறுமீன்வகையாயிருக்கலாம்), வேத வேயகங்கள், கங்கைவாழ் புபுடங்கள், சகுல மீன்கள், பேராமைகளும், முள்ளம்பன்றிகளும், அணில்கள், கலைமான்கள், எதேச்சையாய்த் திரிய விடப்பட்ட காளைகள், வீட்டில் வளரும் பிராணிகளும் எலி முதலியவையும், காண்டா மிருகங்கள், வெண் புருக்கள், வீட்டுப் புருக்கள், உபயோக மற்றவையும் தின்ன உதவாதையுமான நாற்காற் பிராணிகளெல்லாம் [10]

சூல் கொண்டவையும் பால் வற்றுதனவுமான ஆட்டுக் கிடாரிகளும் பெண் பன்றிகளும், ஈன்று ஆறு மாதமாகாத இவற்றின் குட்டிகளும், கொல்லப் பெறக்கூடாது.

வதைப்பதற்காகச் சேவல்களைக் கொழுக்க வைக்கக் கூடாது.

உயிர்களைக் கொண்ட உமிகள் எரிக்கப் பெறக்கூடாது.

காரணமின்றியோ, அவற்றிலுள்ள ஜந்துக்களை அழிக்க உத்தேசித்தோ, காடுகளுக்குத் தீ வைக்கக்கூடாது

உயிர்ப் பிராணிகளை ஊட்டி உயிர்ப் பிராணிகளை வளர்க்கக்கூடாது.

மூன்று காலங்கள் ஒவ்வொன்றையும் ஆரம்பிக்கும் பௌர்ணமியன்றும், திஷ்ய (ஸிரியஸ்) பௌர்ணமியன்றும், ஒவ்வொரு பக்ஷத்தையும் முடித்து அடுத்ததைத் தொடங்கும் மூன்று நாட்களிலும் அல்லது உபவாச தினங்களிலும், (ஆக வருஷத்தில் மொத்தம் ஐம்பத்தாறு நாட்கள்) மீனைக் கொல்லவோ விற்கவோ கூடாது.

---

[10] பிராகிருதமாகவே விடப்பட்ட பெயர்கள் எப்பிராணிகளைக் குறிப்பனவென்று தெரியாதவை அல்லது சந்தேஹமானவை.

இதே நாட்களில் யானை வாழ் காடுகளிலும், செம்படவர் சேரிகளிலும் வாழும் பிராணிகள் கொல்லப்படக் கூடாது.

பக்ஷத்தின் எட்டாம் நாளிலும் பதினான்காம் நாளிலும் பதினைந்தாம் நாளிலும் திஷ்ய நக்ஷத்திரத்திலும் புனர்வஸு (இது கிருத்திகைகளில் ஒன்றாக இருக்கலாம்) நக்ஷத்திரத்திலும், ஒவ்வொரு காலத்தையும் தொடங்கும் பௌர்ணமிகளிலும், உற்சவ நாட்களிலும், காளைகள், வெள்ளாட்டுக் கிடாக்கள், செம்மறி யாட்டுக் கிடாக்கள், ஆண் பன்றிகள், மற்றும் வழக்கமாய்க் காய் அடிக்கப் பெறும் பிராணிகள், காய் அடிக்கப் பெறக்கூடாது.

திஷ்ய புனர்வசு நக்ஷத்திரங்களிலும், ஒவ்வொரு காலத்தின் பௌர்ணமியின் பக்ஷத்திலும், குதிரைகளுக்கும் எருதுகளுக்கும் சூடு போடக்கூடாது.

முடிசூடிக் கொண்டதிலிருந்து இந்த இருபத்தாறு வருஷங்களில் நான் இருபத்தைந்து தடவை கைதிகளை விடுதலை செய்ய உத்திரவிட்டுள்ளேன்.

# உ. பொது நிர்வாகம்: நன்னெறிப் பிரகடனமும் நீதி வழங்கலும்

## பாறைச்சாசனம் III

*பிரியதரிசியரசன் கூறுகின்றான் :*

முடிசூடிப் பன்னிரண்டாண்டுக்குப் பிறகு நான் கீழ் வருவனவற்றைப் பணித்தேன்.

என் சாம்ராஜ்ஜிய மெங்கும் பிரதேச அதிகாரிகளும் மாகாண அதிகாரிகளும் இராச்சிய அதிகாரிகளும் பின் வரும் தரும நெறிகளைப் பிரகடனம் செய்வதற்காகவும்

வேறு காரியங்களைக் கவனிப்பதற்காகவும் ஐந்து ஆண்டு களுக்கொரு தடவை தங்கள் தங்களுக்குட்பட்ட பிராந்தியத்தில் சுற்றி வர வேண்டும்.

தாய் தந்தையர்க்குக் கீழ்ப்படிந்து நடத்தல், நண்பர் அறிமுகமானவர் சுற்றத்தார் மதக்குருமார் துறவியர் இவர்களுக்குத் தானங்கள் வழங்குதல், உயிர்வதை செய்யாமை, பொருளைச் செலவு செய்வதிலும் ஈட்டுவதிலும் நிதானம், இவையெல்லாம் நன்மை பயப்பவை.

என் சொற்படியும் உத்தேசப்படியும் இவ்வுத்தரவுகளை நிறைவேற்றி வைக்கும்படி சபையானது பிராந்திய அதிகாரிகளுக்கு அறிக்கை விடவேண்டும்.

## பாறைச்சாசனம் V (IV 2—ன் தொடர்ச்சி)

இதற்கு முன்பு தருமத்தைப் பரப்புவதற்கென்று அதிகாரிகள் நியமிக்கப் பெற்றதில்லை. நான் என் ஆட்சியின் பதின்மூன்றும் ஆண்டில் இவ்வுத்தியோகங்களை ஏற்படுத்தினேன்.

தருமத்தை ஸ்தாபித்து விருத்தி செய்வதிலும், யோனர்கள் காம்போஜர்கள் காந்தாரர்கள் ராஷ்ட்ரிகர்கள் பிதினிகர்கள் முதலிய என் சாம்ராஜ்ஜியத்தின் மேற்கு எல்லைப் புறத்தில் வாழும் மக்கள் யாவரிடத்தும் தருமத்தில் கருத்துக் கொண்ட எல்லோருடைய நலனையும் சுகத்தையும் பேணுவதிலும், எல்லா மதத்தினருடனும் ஒத்துழைக்க வேண்டுமென்று இவ்வதிகாரிகளைப் பணித்திருக்கின்றேன். போர் வீரரிடத்தும் அவர்தம் தலைவரிடத்தும், துறவியரிடத்தும் இல்வாழ்வோரிடத்தும், ஏழைகளிடத்தும் முதியோரிடத்தும், பணியாற்ற வேண்டுமென்றும், தருமத்தில் கருத்துள்ளோரின் நலனையும் சுகத்தையும் பாதுகாக்கவேண்டுமென்றும், இவர்கள் சிறைப்பட்டிருந்தால் விடுவிக்க வேண்டுமென்றும்

உத்திரவிட்டுள்ளேன். நிறையக் குழந்தைகள் பெற்ற கைதிகளுக்குப் பணம் வழங்கியும், பிறர் தூண்டிக் குற்றம் புரிந்தோரின் விடுதலைக்கு ஏற்பாடு செய்தும், அதிக வயது வாய்ந்தவரை மன்னித்தும், இவ்வாறு கைதிகளிடையே பணியாற்றும்படி அவர்கள் உத்திரவிடப் பட்டுள்ளனர்.

இங்கேயும் (பாடலிபுரத்திலும்) எல்லா மாகாண நகர்களிலும், என் சகோதர சகோதரிகள் சுற்றத்தார் எல்லோருடைய அந்தப்புரங்களிலும், எங்கும் இவ்வதிகாரிகளுக்கு வேலை தரப்பட்டிருக்கிறது. தருமத்தைப் பரப்பும் வேலை ஒப்படைக்கப் பெற்று இவ்வதிகாரிகள் என் சாம்ராச்சியமெங்கும் தருமத்தில் சிறிதே ஈடுபாடுடையவர், தருமத்தில் ஊன்றி நிற்பவர், தானத்தில் கருத்துடையவர், ஆகிய தருமத்தில் பற்றுக்கொண்ட எல்லா மக்களிடையேயும் பணியாற்றிக் கொண்டிருக்கின்றனர்.

இச்சாசனம் என்றும் நிலைத்திருக்க வேண்டும் என்பதற்காகவும் என் சந்ததியாரும் இதன்படி நடக்க வேண்டுமென்பதற்காகவும் தருமத்தைப் பற்றிய இச்சாசனத்தைப் பொறிக்க நான் உத்திரவிட்டுள்ளேன்.

## தூண்சாசனம் IV

பிரியதரிசி யரசன் கூறுகின்றான்:

முடிசூடி இருபத்தாறுண்டு சென்றபின் தருமத்தைப் பற்றிய இச் சாசனத்தைப் பொறிக்கப்பணித்தேன்.

நூறாயிரக் கணக்கான மக்கள்மேல் ஆட்சிசெலுத்தும் வேலையைச் செய்வதற்கென்று நான் மாகாண கவர்னர்களை [ராஜுகர்களை] அமர்த்தியுள்ளேன்.

மாகாண மக்களின் நலனையும் சுகத்தையும் பேணுவதிலும், அவர்களுக்கு பட்டம் பதவிகளை வழங்குவதிலும், கவர்னர்கள் பயமின்றியும் பக்ஷபாதமின்றியும்

இருக்கும் பொருட்டு, கௌரவங்களையோ தண்டனை களையோ கொடுக்கும் பொறுப்பை நான் அவர்கள் தீர்மானத்திற்கே விட்டுவிட்டேன்.

மக்கள் சுகதுக்கங்களின் மூலத்தை அவர்கள் அறிந்து கொள்ளவேண்டும். தருமத்தில் நாட்டங்கொண்டோர் உதவியுடன் அந்தந்த மாகாணங்களின் மக்களுக்கு அவர்கள் இம்மையிலும் மறுமையிலும் சுகந்தரும் வாழ்க்கையை வாழுமாறு உபதேசிக்கவேண்டும்.

மாகாண கவர்னர்கள் எனக்குக்கீழ்ப்படிந்து நடக்கத் தயங்கார் என்பது இருக்கவே இருக்கிறது. இவர்கள் என் விருப்பத்தை நன்கறிந்த மேல் அலுவலர் [புருஷர்] களுக்கும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். இவர்கள் தங்கள் வேலையைச் செய்து என்னைச் சந்தோஷப் படுத்துவதை எளிதாக்குவதற்காக இம்மேல் அலுவலர்கள் மக்களுக்கு உபதேசம் செய்வார்கள்.

"இக் கெட்டிக்காரியான தாதி என் குழந்தையை நன்கு கவனித்துக்கொள்வாள்," என்று எண்ணி ஒரு கெட்டிக் காரத் தாதியிடம் தன் குழந்தையை ஒப்புவித்துவிட்டு ஒருமனிதன் நிம்மதியுடன் இருப்பதுபோல் நானும் என் மாகாண மக்களின் நலனுக்காகவும் சந்தோஷத்திற்காக வும் மாகாண கவர்னர்களை அமர்த்தியிருக்கின்றேன்.

அவர்கள் பயமின்றியும் நம்பிக்கையுடனும் சந்தோஷ மாகவும் தங்கள் கடமைகளை நிறைவேற்றுவதற்காகக் கௌரவங்கள் வழங்குவதிலும் தண்டனைகள் கொடுப் பதிலும் அவர்களுக்குச் சுயேச்சாதிகாரம் அளிக்கப் பெற்றிருக்கிறது.

சட்ட நடவடிக்கைகளிலும் தண்டனை கொடுப்பதிலும் பாரபக்ஷமில்லாமை விரும்பத்தக்கது. ஆகையால் இனிக் குற்றம் புரிந்தவரெனத் தீர்ப்பளிக்கப்பெற்று மரண தண்டனை யடைந்த கைதிகளுக்கு மூன்றுநாள் அவ காசம் கொடுக்கப்பெறவேண்டுமென்று ஆணை பிறப்பித்

துள்ளேன். [இந்த அவகாசத்திற்குள் இவர்களது] சுற்றத்தார் இவர்களது உயிருக்காக அதிகாரிகளிடம் அப்பீல் (மனு) செய்துகொள்ளக்கூடும். ஒருவரும் இவ்வாறு மனுச் செய்யாவிடினும் கைதிகள் தானங்கள் செய்தும் உபவாசமிருந்தும் மறு உலகிற்குத் தயாராகிக் கொள்ளலாம்.

ஏனெனில் அவகாசம் முடிந்ததும் மறு உலகில் அவர்கள் சந்தோஷத்தை அடையவேண்டுமென்பதும், தன்னடக்கம் மூலமாகவும் தானம் வழங்குதல் மூலமாகவும் மக்களிடை பலவிதமான தர்மானுஷ்டானம் பெருகவேண்டுமென்பதும், எனது அவா.

## கலிங்கசாசனம் I

பிரியதரிசியரசன் தோசலியிலுள்ள தம் உத்தியோகஸ்தருக்குப் பின்வரும் செயல்முறைகள் அனுப்பப்பெறவேண்டுமென்று பணிக்கின்ருன்.[11]

யாதாவதொன்று என் கவனத்திற்கு வந்தால் அதை நான் நடைமுறையில் கொண்டுவர விரும்புகின்றேன். இப்படிக் கொண்டுவருவதற்கான தவருத வழிகளைக் காணவும் விரும்புகின்றேன். இதைச் செய்துமுடிக்க எனது முக்கியவழி நான் கண்ட செயல்முறைகளை உங்களுக்குத் தெரிவிப்பதே. ஏனெனில் ஆயிரக்கணக்

---

11 தௌளிவாசகங்கள் ஸமாபா என்று குறிக்கின்றன. கலிங்க பாறைச்சாசனங்கள் I, II, இவை இரண்டும் தௌளியிலும் ஜௌகதாவிலும் மட்டில் காணப்பெறுகின்றன. இவை ஒரேமாதிரி ஆரம்பிக்கின்றன. ஆனால் இரண்டாம் கலிங்கச்சாசனத்தில் அசோகர் எல்லா மக்களும் தம் குழந்தைகள் என்று கூறியபிறகு சுற்றுப்புற நாடுகளின் உறவுகளைப்பற்றிக் கூற ஆரம்பிக்கின்ருர். [மேலே VI A.4-ல் பார்க்க.] முதற் கலிங்கச்சாசனத்திலோ நீதிபரிபாலனத்தைப் பற்றிய செயல்முறைகளை எடுத்துரைப்பதில் அவர் கவனம்செல்லுகின்றது.

கான மக்களை அவர்கள் அன்பு எனக்குக் கிடைக்குமாறு செய்யவேண்டி உங்களிடம் ஒப்படைத்திருக்கின்றேன்.

எல்லா மக்களும் என் குழந்தைகள்; இவ்வுலகிலும் மறுமையிலும் என் சொந்தக் குழந்தைகளின் நலனையும் சுகத்தையும் தேடுவதுபோல் எல்லோருக்குமே அவற்றை நான் தேடுகின்றேன். இந்த என் விருப்பத்தை நீங்கள் முற்றிலும் புரிந்துகொள்ளவில்லை. உங்களில் சிலர் இதைப் புரிந்துகொண்டிருக்கலாம். ஆனால் அவர்களும் கூட இதை அரைகுறையாகவே மனத்தில் வாங்கிக்கொண்டிருக்கின்றனர், முற்றிலுமல்ல. உங்கள் உத்தியோகம் எவ்வளவு உயர்ந்ததாயினும் உங்கள் கவனத்தை இதில் செலுத்தவேண்டும்.

நீதிவழங்குகையில் சிலசமயம் ஒருவன் சிறைவாசத்தையோ சித்திரவதையையோ அடைய நேரிடலாம். இப்படியேற்பட்டால் ஒருசமயம் எதிர்பாராமல் அவன் இறக்கக்கூடும். இதனால் வேறுபல மனிதர் கஷ்டத்திற்குள்ளாவர்.

இம்மாதிரி சந்தர்ப்பங்களில் நீங்கள் நடுவழியை [அதாவது நீதியையோ அல்லது மிதத்தையோ] பின்பற்ற முயற்சிக்கவேண்டும். பொறுமை, கோபம், கொடுமை, அவசரம், தொடர்ந்த முயற்சியின்மை, சோம்பல், களைப்பு ஆகிய இவை இந்நடுவழியைப் பற்றுவதைத்தடுப்பன. ஆகையால் நீங்கள் ஒவ்வொருவரும் இம்மனவெழுச்சிகளுக்கு ஆளாகாமல் இருக்கிறீர்களாவென்று பார்த்துக்கொள்வதில் முயற்சியைச் செலுத்தவேண்டும்.

கோபப்படாமலிருத்தலும் அவசரப்படாமலிருத்தலுமே இம் முயற்சியில் வெற்றிகாணத் திறவுகோலாகும். களைத்த நிர்வாகி முன் செல்லமாட்டான். ஆனால் நீங்கள் நகரவேண்டும், முன்செல்லவேண்டும், முன்னேற வேண்டும்: "உங்களுக்கு அரசரால் இடப்பட்ட வேலை

களை நிறைவேற்றுவதில் உங்கள் முயற்சி முழுவதையும் உபயோகியுங்கள். தேவர்க்குப்பிரியனின் ஆணைகள் இவையிவை,'' என்று உங்களது மேற்பார்வையாளர் உங்களுக்கு எடுத்துக்கூறவேண்டும். இவ்வாறு நான் விதித்தபடி நடப்பது மிகுந்த நன்மையை விளைவிக்கும். இதன்படி நடக்கத் தவறினால் பெருங்கேடு விளையும். ஏனெனில் இதன்படி நடக்கத் தவறினால் நீங்கள் சுவர்க்கத்தையும் அடையமாட்டீர்கள், அரசனது பகுமானங்களையும் பெறமாட்டீர்கள். இதுபற்றி என் எண்ணம் தீவிரமாயிருப்பதற்குக் காரணம் இக் கடமையைச் செய்வதில் இருவிதலாபம் இருக்கிறது. எப்படியெனில் இதை ஒழுங்காக நிறைவேற்றினால் சுவர்க்கத்தையும் பெறுவீர்கள், எனக்கு நீங்கள் செய்யவேண்டியதைச் செய்தவராகவும் ஆவீர்கள்.

இச்சாசனம் ஒவ்வொரு திஷ்ய நக்ஷத்திரத்திலும் எல்லோருக்கும் படித்துக் காட்டப்பெறவேண்டும். வேறு காலங்களிலும் தகுந்த சந்தர்ப்பங்களில் தனி நபர்களுக்கும் வாசித்துக்காட்டப்பெறலாம். இதை நீங்கள் செய்தால் உங்களது கடமைகளை நிறைவேற்றமுடியும்.

அநியாயமாகச் சிறைப்படுத்துவதையும் அநியாயமாகச் சித்திரவதை செய்வதையும் தவிர்க்க எக்காலத்திலும் முயற்சிக்கவேண்டும் என்பதை இந் நகரிலுள்ள நீதிபதிகளுக்கு ஞாபகப்படுத்துவதற்காக இச்சாசனம் இங்கு பொறிக்கப்பெற்றிருக்கிறது. இதற்காகவே ஐந்து வருடங்களுக்கொருமுறை ஒரு அதிகாரியை அனுப்பி வைப்பேன். அவர் கடுமையாகவும் கொடூரமாகவும் இல்லாமல் சாதுவாக இருப்பார். நான் சொல்லியபடி நீதிபதிகள் நடக்கிறார்களா என்பதைக் கவனிப்பது நான் அவருக்கிட்டிருக்கும் வேலை. மேலும், உஜ்ஜயினியிலிருந்து கொண்டு அரசு செலுத்தும் அரசகுமாரனும் குறைந்தது மூன்றாண்டுகளுக் கொருமுறை மேற்கூறியது

போன்ற அதிகாரிகளை அனுப்பிவைப்பான். இம்மாதிரியே தக்ஷசீலத்திலிருந்தும் ஒரு அதிகாரி அனுப்பப்பெறுவார். இவ்வதிகாரிகள் தங்கள் வேலைகளைச் செய்து கொண்டே பிரதேச நீதிபதிகள் அரசனது ஆணைகளை நிறைவேற்றுகின்றார்களா என்பதைப் பார்த்துக்கொள்வர்.

## 3. மருத்துவ உதவியும் நலனும்

### பாறைச்சாசனம் II

பிரியதரிசியரசன் சாம்ராஜ்யமெங்கும், மற்றும் சோழர், பாண்டியர், சத்தியபுத்திரர், கேரளபுத்திரர் [இவையெல்லாம் தீபகற்பத்தின் தெற்கு ஓரத்திலுள்ளவை] சிங்களவர், அந்தியோகன் என்ற யோன அரசன், அந்தியோகனது அண்டை அரசர், இவரது இராச்சியங்கள் எங்கும், மனிதர்க்குச் சிகித்ஸை, மிருகங்கட்குச் சிகித்ஸை, என்று இருவித மருத்துவ உதவிக்கும் ஏற்பாடு செய்யப்பெற்றிருக்கிறது.

மனிதர்க்கும் மிருகங்கட்கும் தகுதியான மூலிகைகள் முன் இல்லாதவிடங்களில் கொண்டு சேர்க்கப்பெற்றும் வளர்க்கப்பெற்றும் வருகின்றன. இப்படியே கிழங்குகளும் பழங்களும் இல்லாதவிடங்களில் அனுப்பப்பெற்றும் வளர்க்கப்பெற்றும் வருகின்றன.

மனிதர்களும் பிராணிகளும் உபயோகிப்பதற்காகச் சாலைகள் நெடுகக் கிணறுகள் தோண்டப்பெற்றிருக்கின்றன, மரங்களும் நடப்பெற்றிருக்கின்றன.

### தூண்சாசனம் VII (IV 1-ன் தொடர்ச்சி)

#### பிரியதரிசியரசன் கூறுகின்றான்:

மனிதர்க்கும் மிருகங்கட்கும் நிழல் தருவதற்காகச்

சாலைகள் நெடுக ஆலமரங்களை நட உத்திரவிட்டுள்ளேன். மாந்தோப்புக்களை வைக்கவும் உத்திரவிட்டுள்ளேன். அரைக்குரோசத் [சுமார் அரைமைல்] திற்கொன்ருகக் கிணறுகள் வெட்ட உத்திரவிட்டுள்ளேன், தங்குமிடங்கள் கட்டவும் உத்தரவிட்டுள்ளேன், மக்கட்கும் மிருகங் கட்கும் உபயோகமாகும்படி பல தண்ணீர்ச்சாலைகளை நிறுவ ஏற்பாடு செய்துள்ளேன்.

இச் சௌகரியங்கள் மிகக்குறைந்தவையே. ஏனெனில் என்னைப்போல் எனக்குமுன் வாழ்ந்த அரசர்களிட மிருந்தும் பலவகையான சௌகரியங்களை மக்கள் பெற் றிருக்கின்றனர். ஆனல் மக்களும் சிரத்தையுடனும் ஈடு பாட்டுடனும் இத் தருமவழியைப் பின்பற்றவேண்டு மென்றே முக்கியமாக நான் செய்தவற்றைச் செய் துள்ளேன்.

## 4. புத்தமதமும் ஆஜீவிகப்பிரிவும்

### மாஸ்கீ பாறைச்சாசனம்

தேவர்க்குப்பிரியனை [12] அசோகன் கீழ்க்கண்ட பிரக டனத்தைச் செய்கின்ருன்:

இரண்டரை வருடங்களுக்குமேலாக நான் சாமான்ய மாகப் புத்தரைப் பின்பற்றுபவனுக [உபாசகனுக] இருந்து வருகின்றேன். ஒரு வருடத்திற்கும் முன்னதாக நான் ஸங்கத்தை [புத்த சன்னியாசிக் குழுவினரை]ச்

---

[12] அசோகன் என்று அரசரது பெயர் மாஸ்கீயிலுள்ள பாடத்தில் வருகிறது. அரசனுகிய அசோகன் அதாவது அசோக ராஜன் என்று குஜர்ரா பாடத்தில் வருகிறது.

சென்று தரிசித்தேன். அதிலிருந்து என் முயற்சிகளி லெல்லாம் தீவிரமாக இருந்துவருகின்றேன்.

[இச்சாசனம் தொடர்ந்து, தேவர்களை அடையும் வழியானது ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் ஒன்று போல், தருமத்தை அனுஷ்டிப்பதால் திறக்கின்றது என்று பிரகடனம் செய்கின்றது; மேலே VI A. 2. ஐப் பார்க்க.]

## பாப்ரா பாறைச்சாசனம்

மகதத்தைச் சேர்ந்த பிரியதரிசியரசன் ஸங்கத்திற்குத் தன் வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு அவர் களது ஆரோக்கியத்தையும் அபிவிருத்தியையும் விரும்பு கின்றான்.

பதந்தர்காள், (மரியாதைக்குரிய ஐயன்மீர்,) புத்தர் தருமம், ஸங்கம், இவற்றினிடத்து எனக்குப் பக்தியும் சிரத்தையும் எந்த அளவு உண்டு என்பது உங்களுக்குத் தெரியும்.

பதந்தர்காள், புத்த பகவான் கூறியது யாவும் நன்கே கூறப்பெற்றன. ஆயினும் அவற்றுள் தருமத்தின் தத்து வங்களைக் கூறுகின்றவையும் அதை என்றும் நிலை பெற் றிருக்குமாறு செய்யக்கூடியவையுமாகிய பகுதிகளை நான் எடுத்துக் கூறுவது நியாயமேயாகும்.

பதந்தர்காள், தருமத்தைப்பற்றிய பகுதிகள் பின் வருவன:

ஒழுக்கக் கட்டுப்பாட்டின் உயர்வு [விநய-ஸமுகஸே]
ஆதரிச வாழ்வின் வகைகள் [அலிய-வஸானி]
பிற்காலத்தைப்பற்றிய பயங்கள் [அநாகத-பயாநி]
முனிவர் பாட்டு [முனி-காதா]
முனிவாழ்வுச் சூத்திரங்கள் [மௌநேய-ஸூதே]
உபதிஷ்ய வினவுகள் [உபதிஸ-பஸிநே]

ராஹுலோபதேசம் [ராஹுலவாத]: இது புத்த பகவானால் பொய் என்ற பொருள் பற்றிச் செய்யப்பெற்றது.

பதந்தர்காள், பலபிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் அடிக்கடி தருமத்தைப்பற்றிய இப்பகுதிகளைக்கேட்டு அதைப் பற்றிச் சிந்தனை செய்யவேண்டும் என்பது எனது விருப்பம். இப்படியே உபாசகர்களும் ஆண் பெண்கள் யாவரும் செய்யவேண்டும்.

பதந்தர்காள், அவர்களெல்லோரும் என் உத்தேசத்தை அறிந்துகொள்ள வேண்டுமென்று இச்சாசனத்தைப் பொறிக்கப்பணித்தேன்.

## ஸாஞ்சீ தூண் சாசனம்

[ஸாஞ்சீயிலுள்ள அசோகரது அதிகாரிகளுக்கென்று விடுக்கப்பெற்றிருக்கலாம் என்று ஊகிக்கக்கூடிய இச் சானத்தின் தொடக்கத்திலுள்ள வரிகள் சிதைந்து போயிருக்கின்றன. இப்பகுதியில் "பிரிக்கப்பட" என்ற சொல் தெளிவாகத் தெரிகின்றது. ஆகையால் இப் போதனைகள் சங்கம் பிளவுபடாமல் தடுப்பதற்காக அனுசரிக்கவேண்டிய செயல்முறைகளைச் சொல்வதற்காக என்பது தெளிவு.]

என் பிள்ளைகளும் கொள்பேரன்களும் ஆளும்வரையும், சூரிய சந்திரர் பிரகாசிக்கும்வரையும், ஒன்றுபட்டு நிற்கவேண்டும் என்பதற்காகப் பிக்ஷுக்களுடைய ஸங்கம், பிக்ஷுணிக்களுடைய சங்கம், ஒவ்வொன்றும் ஒன்றுபடுத்தப்பட்டிருக்கின்றன. ஸங்கத்தைப் பிளவுறச் செய்யும் பிக்ஷுவோ பிக்ஷுணியோ [வழக்கமான மஞ்சளாடைக்குப் பதில்] வெண்ணுடை யுடுத்தி மடத்திற்கு வெளியில் [அநாவாஸஸி] தங்கும்படி செய்யப் பெறவேண்டும். ஸங்கம் பிளவுறுமல் என்றும் நிலைத்திருக்க வேண்டுமென்பது எனது விருப்பம்.

## ஸார்நாத் தூண் சாசனம்

[இச்சாசனத்தின் முதல் மூன்றுவரிகள் சிதைந்திருக்கின்றன. அங்குமிங்கும் மீந்திருக்கும் இவற்றின் பகுதிகளிலிருந்து இது, "ஒருவரும் சங்கத்தைக் குலேக்காமல்" இருப்பதற்கு வேண்டிய முன் ஜாக்கிரதை எடுத்துக் கொள்ளும்படி பிரியதரிசியரசன் தம் அதிகாரிகளுக்கு—இவர்கள் ஒருகால் பாடலீபுத்திரத்தில் அமர்த்தப்பெற்ற அதிகாரிகளாயிருக்கலாம்—உத்தரவுகள் பிறப்பித்திருக்கும் சாசனமோ, என்று எண்ணத் தோன்றுகிறது.]

ஒரு பிக்ஷுவோ பிக்ஷுணியோ ஸங்கத்தைக் குலேத்தால் அவர் வெள்ளேயுடுத்தி மடந்திற்கு வெளியில் வசிக்கும்படி செய்யப்படவேண்டும்.

இச்சாசனம் பிக்ஷுக்கள் சங்கத்திலும் பிக்ஷுணிகள் சங்கத்திலும் பிரசுரப்படுத்தப்பெறவேண்டும்.

பிரியதரிசியரசன் கூறுகின்றுன்:

இச்சாசனத்தின் ஒரு பிரதியை விஹாரத்தின் மடத்தில் [ஸம்ஸரணத்தில்] வைக்கவும், வேருெரு பிரதியை உபாசகரிடம் கொடுக்கவும். உபாசகர் இச்சாசனத்தைப் படித்தறிவதற்காக ஒவ்வொரு உபவாச தினத்திலும் ஒன்றுகூடவேண்டும். ஒவ்வொரு அதிகாரியும் இச்சாசனத்தை நன்ருகப் பாடம்செய்து புரிந்துகொள்வதற்காக ஒவ்வொரு உபவாச தினத்திலும் தவருமல் ஆராதனத்தின்போது கூட இருக்கவேண்டும்.

மேலும் நீங்கள் [பாடலீபுத்திரத்திலுள்ள அசோகரது அதிகாரிகள்] உங்கள் அதிகாரத்தின் கீழுள்ள பிரதேசம் முழுதும் இச்சாசனத்தை அமுலாக்கி உத்திரவுகள் பிறப்பிக்கவேண்டும். கோட்டைகளிலும் அவற்றின் சுற்றுப்புறங்களிலும் உங்களுக்குக் கீழுள்ள அலுவலரும் இவ்வாறே செய்யவேண்டும்.

## ரும்மிந்தெய்த் தூண்சாசனம்

தேவர்க்குப்பிரியனுன பிரியதரிசியரசன் முடிசூடி இருபதாண்டுகளுக்குப்பின் நேரில் இவ்விடத்திற்கு வந்து பூசித்தான், ஏனெனில் இது சாக்கியமுனியாகிய புத்தர் பிறந்த ஸ்தலம்.

அதைச்சுற்றிக் கற்சுவர் ஒன்றை எழுப்ப அவன் உத்திரவிட்டான். தான்வந்து தரிசித்ததின் நினைவுச் சின்னமாக இத் தூணையும் நாட்டினுன்.

லும்மினி [இப்போது ரும்மிந்தெய் எனப்படுவது] க்கிராமத்திற்கு வரிவிலக்குச் செய்து, விளைவில் எட்டில் ஒருபங்கு [வழக்கமான அளவில் சுமார் பாதி] நிலவரியே கொடுக்கும்படி விதித்தான்.

## கர்ணசௌபார் குகைச்சாசனம்[13]

பிரியதரிசியரசன் முடிசூடிப் பத்தொன்பதாண்டு கட்குப்பின் மிக ரம்மியமான கலதிகக் குன்றிலுள்ள, மழைக்கால வெள்ளங்களுக்கப்பாற்பட்ட, இக்குகையைச் சமர்ப்பணம் செய்தான்.

---

[13] பராபர் குன்றுகளில் ஏழுகுகைகள் கண்டுபிடிக்கப் பெற்றிருக் கின்றன. இவற்றை பராபர் குகைகள் (நான்கு) என்றும், நாகார்ஜுனி குகைகள் (மூன்று) என்றும், வழக்கமாகக் கூறுவர். பராபர் குகை களுள் மூன்றில் அசோகரது கல்வெட்டுக்கள் காணப்பெறுகின்றனர். மொத்தம் ஏழு குகைகளில் ஐந்து ஆஜிவிக பிக்ஷுக்களின் உபயோ கத்திற்கென்று சமர்ப்பணம் செய்யப்பெற்றவை. பராபர் குன்றுக்கு அசோகர் காலத்தில் கலதிகக் குன்று என்று பெயர்.

# அநுபந்தம்

## பௌத்த சமய பரிபாஷை

அகிரியம் : செய்யத்தகாதன, (தீய செயல்கள்.)

அக்கிரியா வாதம் : எது செய்யினும் பாபமோ, புண்யமோ உண்டாவதில்லை என்றவாதம். பூரண கஸ்ஸ்பனின் கொள்கை.

அகுசலம் : தீயவை. அகுசல கர்மம் — தீய செயல்; அகுசல வேதனை — துக்க அறிவு.

அசுபபாவனை : ஸமாதியை அடைவிக்கும் அசுப நிமித்தங்களை பாவிப்பது, உடல் உறுப்பிலும் அததன் செயலை வெறுத்தல்.

அத்தா (ஆத்மா) : ஆன்மா — அழியாத பொருள்.

அந்திம ஸரீர : கடைசி காயம் — இனிப்பிறவாத தன்மை,

அந்யோந்ய வாதம் : பொருள் யாவும் யாரும் செய்தவை அல்ல, செய்விக்கப் பட்டவையும் அல்ல என்ற கொள்கை — பகுத கச்சாயனுடைய வாதம்.

அநாத்மா : ஆன்மா அல்லாதது, நிலையற்றது.

அநாத்ம வாதம் : உச்சேத வாதம். ஆன்மா ஜடப்பொருள், சாவுக்குப் பின் இது இருப்பதில்லை, என்ற கொள்கை. அஜித கேசகம்பலனின் வாதம்.

அநித்யம் : நிலையிராதது.

அநிமித்த ; நிர்வாணத்தின் ஒருவகை, ராக, துவேஷ, மோஹ (காமம், வெகுளி, மயக்கம்,) அறவே ஒழிந்த நிலை.

அநுபகாதம் : கொல்லாமை.

அபதம் : சுவடே இராத புத்தன் அடைந்த நிலை.

அபதானம் : திரிபிடகம் பார்க்க.

அப்பமாதம் : விழிப்பு, உழைப்பு, தியானம், சிரத்தை, முயற்சி.

அபாரம் : அக்கரை, நிர்வாணம்.

அபிஜ்ஞா : மறந்து போனவை மீண்டும் நினைவில் வருதல். இது ஆறுவகைத்து : யோக சுரோத்ரம், யோக சக்ஷுஸ், பிரஸித்த ஞானம்; ஜந்மாந்தர ஸ்மரணம், காம, துவேஷ, மோக விநாசம் ; இருத்திகள்.

அபிதம்மம் : திரிபிடகம் பார்க்க.

அரிய : (ஆர்ய) சான்றோர்.

அரிய ஸச்சானி : (ஆரிய வாய்மை நான்கு) துக்கம், துக்கோற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம்.

அருபராகம் : உருவம் பெறுமல் இருப்பதற்குரிய உலகில் வாழவிரும்புதல்.

அர்ஹத் : (அருகன்) நான்காவது தியான நிலையை எய்தியவன்.

அவிஜ்ஜா : (அவித்யை), அஞ்ஞானம் (பேதைமை), தசஸம்யோஜனங்களில் ஒன்று.

அஷ்டாங்க மார்க்கம் : நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன் முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுள்ளத்தோர் தலைப்பாடு.

அஸம்தாஸ (அஸந்த்ராஸ) அஞ்சாமை.

ஆதப்பம் : உடலை வருத்தும் நோன்பு

ஆத்மா : நிலையான வஸ்து — ஆன்மா.

ஆத்மவாதம் : இதைக் கூறும் வாதம்.

ஆராமம் : உபவனம்.

ஆஸவ : வேட்கை, நசை, நான்கு வகைத்து: காமாஸவ, பவாஸவ, திட்டாஸவ, அவிஜ்ஜாஸவ,

இத்தி (இருத்தி) அற்புத சக்தி, அணிமாதி சித்தி.

உச்சேதவாதம் : நற்செயலுக்கும், தீய செயலுக்கும் பயனோ, பரிணாமமோ இல்லை எனும் வாதம்.

உத்தச்சம் : மயக்கம்.

உத்தமத்த : (உத்தமர்த்தம்) விழுமிய பொருள்.

உத்தராஸங்கம் : சிராவகரின் மேற் போர்வை.

உபஸம்பதா : பிக்ஷுவாவதற்கான தகுதி அல்லது தீட்சை பெறுவது.

உபாதானம் : பற்று — துவாதச நிதானம் பார்க்க.

உபேக்ஷாபாவனை : விருப்பு வெறுப்பின்றி எவ்வுயிரையும் சமமாகக் கருதுதல் — பாவனை என்பதின் கீழ் பார்க்க.

ஓகமோகம் : இல்லறத் தளைகள்.

கண்ஹம் தம்மம் : கரும் செயல் — தீய செயல்.

கந்தம் : பஞ்சஸ்கந்தம் பார்க்க.

கம்மம் : (கர்மம்) வினைகள்.

கம்மக்கிலிட்டம் : பாபச் செயல்கள் (கர்மக்லிஷ்டம்).

கம்மஸங்நிசயோ : வினையால் திரட்டியவை, (கர்மஸம்நிசயம்.)

கரணம் : செய்கை.

கருணா பாவனை : பாவனை பார்க்க.

கவேஷண : ஆய்வு.

காதா : செய்யுள் — பாட்டு.

காமச் சந்தம் : காமவிகாரம், ஐந்து நிவாரணங்களில் ஒன்று

காமம் : ராகம் (நசை)

தீணுஸவ : (க்ஷீணுஸவ) வேட்கை ஒழிந்த நிலை.

கிலேசம் : பாபம்.

குசல கர்மம் : நற் செயல்

குசல வேதனை : சுக அறிவு.

குசலா குசல வேதனை : சுக துக்க அறிவு.

சங்கம் : ஸங்கம் பார்க்க

சரிய : சரியை

சிராவகர் : பௌத்த பிக்ஷுக்களில் நான்கு வகையினர், ஸோதோபந்ந, ஸீகதாகாமி, அநாகாமி, அர்ஹத். (சிராவகன் என்றால் தர்மம் கேட்பவன்)

சீலம் : ஒழுக்கம். பஞ்சசீலமாவன ; கொல்லாமை, கள்ளின்மை, பொய்கூருமை, காமமின்மை, இரவாமை.

அஷ்டசீலமாவன — மேற் சொன்னவற்றுடன், இரவில் தூயதல்லாத உணவைப் புசியாமை, மணமுள்ள பொருளை உபயோகியாமை. பாயில் படுத்தல் இவை மூன்றும் சேர்ந்தது.

தசசீலமாவன : மேற் சொன்ன எட்டுடன் ஆடல் பாடல் விரும்பாமை, பொன் வெள்ளி போன்ற பொருளைத் தீண்டாமை இவை இரண்டும் சேர்ந்தது. பஞ்சசீலம் இல்லறத்தவரும், அஷ்டசீலம் இலவறத்தவரில் நிஷ்டாபரரும், தசசீலம் துறவோரும் கடைப்பிடிக்க வேண்டியவை.

சிம்மசய்யை : சிம்மம் படுப்பதுபோன்று புத்தன் படுத்து மகா பரி நிர்வாணம் எய்தினர்.

சேதியம் : (புத்தன்) கோயில்.

தண்ஹ : (திருஷ்ணை) — வேட்கை.

தசபாரமிதை : தானம் முதல் ஞானம் ஈறுக உள்ள பத்தும் பூரித்தல். பத்தாவன ; தான பாரமிதை; சீலபாரமிதை ; க்ஷமாபாரமிதை ; வீரிய பாரமிதை ; தியான பாரமிதை ; பிரஜ்ஞா பாரமிதை ; உபாயபாரமிதை ; தயாபார மிதை, பலபாரபாரமிதை, ஞானபார மிதை.

ததாகதர் : (அங்ஙனம் சென்றவர், சொன்ன வண்ணம் செய்தவர். புத்தர் தம்மைக் குறிக்கும் போது படர்க்கையில் கூறுவர்).

தர்மசக்கர ப்ரவர்த்தனம் : அறவாழி உருட்டல், புத்தனுடைய உபதேசம்.

தர்மம் : அறம்.

தர்மாநுஸ்ஸதி : தருமத்தை வழிபடல்.

தாதுகப்ப : கருவறை.

திரிபிடகம் : பௌத்த ஆகமங்கள் மூன்று : விநயபிடகம் ; ஸுத்தபிடகம் ; அபிதம்ம பிடகம். விநய பிடகத்தின் பகுதிகள் : ஸுதத்விபங்கம், கந்தகங்கள், பரிவார. ஸுத்தவிபங்கத்தின் பிரிவாவன பாராஜிகம், பாசித்திய. கந்தகத்தின் பிரிவுகள் : மஹாவக்கம், சுள்ள வக்கம்.

ஸுத்த பிடகத்தின் பகுதிகள் : தீக்க நிகாயம், மஜ்ஜிம நிகாயம் ; ஸம்யுத்த நிகாயம்; அங்குத்தர நிகாயம்; குத்தக நிகாயம்.

குத்தக நிகாயத்தின் பகுதிகளாவன ; குத்தக பாட ; தம்மபதம் ; உதானம் ; இதிவுத்தகம் ; ஸுத்த நிபாதம்; விமானவத்து; பேதவத்து ; தேரகாதா ; தேரீ காதா; ஜாதக ; நித்தேச ; பதிஸம்பிதா ; அபதானம் ; புத்தவம்ச ; சரியாபிடகம்.

அபிதம்ம பிடகத்தின் பகுதிகள்: தம்ம சங்கனி விபங்க; கதாவத்து; புக்கல பஜ்ஞத்தி; தாதுகதா; யமக, பத்தான (பிரஸ்தான).

திரிரத்தினம்: புத்தம் சரணம், தம்மம் சரணம், ஸங்கம் சரணம் எனும் மும்மணி.

தேர: (ஸ்தவிர) முதிய பௌத்த பிக்ஷுக்கள், இவர்கள் பாடியன தேரகாதா.

தேரீ ஸ்தவிரப் பெண்கள், இவர்கள் பாடியன தேரீகாதா.

நிதானம்: பன்னிரு நிதானங்கள்: பேதமை, செய்கை, உணர்வு, கருவுரு, வாயில், ஊறு, நுகர்ச்சி, வேட்கை, பற்று, தோற்றம், மூப்பு, சாக்காடு.

நியதிவாதம்: யாவும் விதியின் செயல் எனும் கொள்கை, மக்கலி கோஸாலனுடைய வாதம் இது.

நிரிவாணம்: பௌத்தர் கூறும் முடிவான லயம் — மோக்ஷம்.

நிவாரணம்: விலக்குதற் குறியன: காமவிகாரம், வெகுளி, சோம்பல், மயக்கம், ஐயப்பாடு, ஆகியவை.

பச்சவேக்கணம்: உடலுக்கு முக்கியமான நான்கினை கருத்துடன் போற்றுவது.

பச்சேகபுத்த: தனிப்பட்ட புத்தன்.

பஞ்சஸ்கந்தம்: ரூபம், வேதனை, ஸஞ்ஞா, ஸம்ஸ்கார, விஞ்ஞான.

பதிக்கா ஸமுப்பாதம்: (ப்ரதீத்ய ஸமுத்பாதம்—அழிந்து தோன்றுவது எனும் தத்துவம்.

பவம்: கருமத் தொகுதி — பிறப்பு — தோன்றுதல்.

பவசக்கரம்: பிறவாழி.

பமாதம்: முயற்சியின்மை.

பாசித்தியம் : பிராயச்சித்தம் அல்லது கழுவாய் செய்து கொள்ளக் கூடிய குற்றங்கள்.

பாவனை : ஐந்தாவன : மைத்ரீ—எவ்வுயிரும் இன்புற்று இருக்கவேண்டுமென பாவித்தல், கருணை —யாவரும் வறுமை நீங்கி இருக்கவேண்டு

மென பாவித்தல், முதித, யாவரும் தத்தம் நல்வினைப் பயனை அடைவதாக என பாவிப்பது, அசுப உடலின் நிலையின் மையை பாவித்தல், உபேக்ஷை, விருப்பு வெறுப்பு இன்றி எவ்வுயிரும் சமமென பாவிப்பது.

பாலீ : திரிபிடகம் அமைந்துள்ள மொழி. வடமொழி யினின்று பிரிந்த பிராகிருதமொழிகளுள் இது பழமையானது. புத்த பகவான் இம் மொழியில் உபதேசம் செய்தார்.

பிரம்மவிஹார : இது பாவனை. அசுப பாவனை ஒழிந்த மற்ற பாவனைகள் நான்குமாம்.

பிரம்ம சரியம் : விரத வழியே ஒழுகும் நிலை. கற்பு நிலை.

பிரவாரணை : பிரார்த்தனை மூலம் தவறினைத் திருத்திக் கொள்ளுதல்; சிராவகர்க்குரியது.

பிக்ஷு, பிக்ஷுணீ : பௌத்த சன்னியாசி, சன்னியாசினி.

மக்க : மார்க்கம், நன்னெறி, அறத்தாறு.

மகாபரிநிர்வாணம் : புத்தனின் நிர்வாணம்.

மத்திமபடிபதா : மத்யம ப்ரதிபத : நடுவழி, இருமுனை சாராத நடுவழி.

மாகந்தியன் : ஓர் அந்தணன். புத்தர் யாரெனத்தெரிந்து கொள்ளாமல் தன் அழகிய மகள் மாகந்தியை அவரிடம் அழைத்துச் சென்றான். அவனுடைய எண்ணத்தை அறிந்த போதிமாதவன், "அந்தணனே காமத்தை விளைவிப்பதான கலவியை நான் இன்பமெனக் கருதவில்லை. தூய்மையற்ற

பொருள்கள் நிரம்பிய இவ்வுடல் காலால் கூடத் தீண்டுதற்குரிய தன்று" என்ருர். இதனுல் மாகந்தியன் புத்தருக்கு விரோதி யாஞன்.

| | |
|---|---|
| மாரன் : | தீமை. |
| யக்க : | யக்ஷர், தெய்வங்களில் ஒரு சாரார். |
| யக்கஸ்ஸ ஸுத்தி : | தெய்வத் தூய்மை. |
| யாகம் : | வேள்வி. |
| யோஜனை : | எட்டுமைல் கொண்ட நீட்டலளவை. |
| ராக : | காமம் (ஆசை) |
| ரூபாரூப : | உருவும் அருவும், உயிரும் உடம்பும் சேர்ந்த கூட்டம். |
| ரூபராக : | உருவம் பெற வேண்டுமென்ற நசை. |
| விக்ஷேபம் : | கலக்கம். |
| விநய : | ஒழுக்க விதிகள் : சிராவகர்களின் உணவு, உடை, உறைவிடம், நடத்தை, இவை பற்றிய ஒழுக்க முறைகள். |
| விஜ்ஜா : | வித்தை — அறிவு. |
| விவேக : | உலகத்தொடர்பற்ற மனநிலை. |
| ஸக்காபாயம் : | சொர்க்கமும் நரகமும். |
| ஸங்கம் . | சிராவகர் கூட்டம். |
| ஸங்காநுஸ்ஸதி : | ஸங்கத்தவரை வழிபடல். |
| ஸத்தர்மம் : | அழியா அறம், தர்மஸநாதனம். |
| ஸம்போதி அங்கம் : | அறிவுக்கான அம்சங்கள்: ஸதி (தன்னுறுதி); தம்மவிசய (கொள்கையை ஆராய்தல்) ; வீரிய (முயற்சி) ; பீதி (பிரீதி) ; பஸ்ஸதி (தெளிவு) ; ஸமாதி (நிலைத்த சிந்தனை) ; உபேக்கா (விருப்பு வெறுப்பற்ற நிலை). |

ஸம்யோஜனங்கள் : பத்து : ஸத்காயத்ருஷ்டி (உடல் உண்மை என்ற நினைவு), விசிகிச்சா (ஐயம்), சீல விரதம் (பயனை எதிர்பார்த்து நோற்றல்), படிகா (சினம்), காமம் (விஷயாதிகளில் விருப்பம் — இணை வீழ்ச்சு), ரூபராகம், அரூபராகம் ; மானம் (செருக்கு), உத்தச்சம் (தற்புகழ்ச்சி), அஞ்ஞானம் (அறியாமை).

ஸமத : தன்னடக்கம்.

ஸேக்கோ : மாணவன், கற்பவன்.

க்ஷணிகம் : நிலையில்லாதது, மறைவது.